# கத்தாங்கண்ணி வெண்டுவகுல வரலாறு



செ. இராசு

# கத்தாங்கண்ணி
# வெண்டுவகுல வரலாறு

ஆசிரியர்

**புலவர் செ.இராசு, பிஎச்.டி.,**
தலைவர், கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

வெளியீடு
திருப்பணிக் குழுவினர்,
அருள்மிகு ஆயிஅம்மன் கோயில்
சர்க்கார் கத்தாங்கண்ணி
ஈரோடு மாவட்டம்.

வெளியீடு : **அருள்மிகு ஆயிஅம்மன் திருக்கோயில்**

வரலாற்று நூல் வெளியீடு

**29.5.98 வெள்ளிக்கிழமை காலை 9 மணி.**

குடமுழுக்கு விழா நாள்

**5–6–98 வெகுதான்ய வருடம் வைகாசி மாதம் 22ஆம் தேதி வெள்ளிக்கிழமை அன்று காலை 5–45 மணிக்கு மேல் 6–45 மணிக்குள்.**

ஆசிரியர் : **புலவர் செ. இராசு, பிஎச்.டி.**

நூல் கிடைக்குமிடம் :

திருப்பணிக் குழுவினர்
அருள்மிகு ஆயிஅம்மன் திருக்கோயில்
சர்க்கார் கத்தாங்கண்ணி, பெருந்துறைவட்டம்
ஈரோடு மாவட்டம் 638 752.

விலை ரூபாய் 30–00

அச்சிட்டோர் அலமு பிரிண்டிங் ஒர்க்ஸ், இராயப்பேட்டை,
சென்னை – 600 014. போன் : 8268871

*நூற்றாண்டு விழாக் காணும் என் அப்பாரய்யன்*

**ஆ.ம.ரா.தி. திருமலைசாமிக் கவுண்டருக்கு**

*எனது காணிக்கை*

| | |
|---|---|
| *பிறந்த தேதி* | *மறைந்த தேதி* |
| *17-10-1897* | *04-11-1951* |

**கோயில் கல்வெட்டு ஆய்வு, மற்றும் பொருள் உதவி:**
தாயாதி ஆ.ம.ரா.தி.சி. **அருள் செந்தில்குமார்,** பி.இ.,
தேவனூர் புதூர் – 642 207
உடுமலை வட்டம்
கோவை மாவட்டம்

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | வேளாளர் தோற்றமும் குடியேற்றமும் | 1 |
| 2. | கொங்குநாடு | 5 |
| 3. | குறுப்புநாடு | 9 |
| 4. | காஞ்சிமா நதி | 16 |
| 5. | கத்தாங்கண்ணி | 22 |
| 6. | ஆயிஅம்மன் கோயில் | 26 |
| 7. | கல்வெட்டுக்கள் | 30 |
| 8. | கத்தாங்கண்ணிக் கோயில்கள் | 34 |
| 9. | வெண்டுவகுலம் | 41 |
| 10. | வெண்டுவகுலக் காணியூர்கள் | 46 |
| 11. | வரலாற்று ஆவணங்களில் வெண்டுவகுலம் | 52 |
| 12. | கம்பரும் வெண்டுவகுலமும் | 57 |
| 13. | குலகுருக்கள் | 61 |
| 14. | புகழ்பாடிய புலவர்கள் | 65 |
| 15. | தாயாதிகள் உள்ள ஊர்கள் விபரம் | 68 |

# 1. வேளாளர் தோற்றமும் குடியேற்றமும்

**புராணம்**

வீராட்சிமங்கலம் கந்தசாமிக் கவிராயர் அவர்கள் வேளாள புராணம் என்னும் நூலை மிகவும் அழகிய கவிதைகளால் பெருங்காவியமாகப் பாடினார். அதில் வேளாளர் தோற்றம் பற்றிப் புராண ஐதீகங்களுடன் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

அந்நூலை அழகிய உரைநடை வடிவில் கோவை விளாங்குறிச்சி நா. மருதாசலக்கவுண்டர் அவர்கள் ஆக்கியளித்துள்ளார்கள். அதில் கீழ்வருமாறு வேளாளர் தோற்றம் கூறப்படுகிறது.

கைலாசத்தில் சிவபெருமான் வீற்றிருக்கும்போது நான்முகன் உலகத்தில் இறைவனால் படைக்கப்பட்ட வசதிகளை மக்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லையே என்று முறையிட்டார். சிவபெருமான் நான்முகனிடம் திருமாலைச் சென்று பார்க்குமாறு பணித்தார்.

திருமாலிடம் நான்முகன் முறையிடும்போது போதாயன முனிவர் வந்தார். போதாயன முனிவரை அறிமுகப்படுத்தி அவரையே வேண்டிய ஏற்பாடு செய்யுமாறு திருமால் வேண்டினார்.

உண்ணத் தெரியாமல், உணவைப் படைக்கத் தெரியாமல் இருந்த உலகுக்குக் கங்கைத் தாயின் அருகேயுள்ள திருவேணி சங்கமத்திலிருந்து ஒரு மரபாளனை உற்பத்தி செய்து அவனுக்குச் சகல செய்திகளையும் கற்பிக்குமாறு போதாயனருக்குத் திருமால் ஆணையிட்டார்.

கங்காதேவியின் சன்னிதானங்களில் வணங்கி மரபாளனைப் பெற்றுத் தன்னோடு இந்திரலோகத்திற்கு அனுப்ப வேண்டும் என்று போதாயன முனிவர் வேண்டினார்.

தான் பெற்ற மரபாளனை இரு கைகளாலும் பரிந்து எடுத்து உச்சிமோந்து ஆனந்த முத்தங்கள் தந்து பொன்னுலகு சென்று சிறப்பெல்லாம் பெற்றுப் போதாயனருடன் மண்ணுலகு செல்க மகனே என்று கங்காதேவி அனுப்பி வைத்தாள்.

இந்திரன் எல்லா இன்பங்களையும் குறைவறப் பெற்றிடுக என வாழ்த்தினான். இந்திரன் மரபாளனைச் சரியாசனத்தில் இருக்கச்

செய்து "பார் முழுதும் ஏர்முனையைத் தான் நம்பியுள்ளது. சீரைத் தேடின் ஏரைத் தேடு" என்கிறார்கள். சகல பிணிகளிலும் தலைசிறந்த பசிப்பிணியைத் தீர்க்க உழவு வைத்தியத்தைத் தவிர வேறு உண்டோ? உழவுத் தொழில் இல்லாமல் உலகில் என்னதான் நடக்கும். இதற்கு இணையான தொழில் ஏதுமில்லை என்றான்.

இந்திரன், குபேரன் இவர்கள் பெண்மக்களை மணந்த மரபாளன் (வேளாளன்) பூமிக்கு வந்து பயிர்த்தொழில் செய்ய முற்பட்டான். கங்கையின் அருளால் தோன்றியமையால் வேளாளர் கங்கா குலத்தினர் என அழைக்கப்பட்டனர்.

**பட்டயம்**

அவ்வாறு தோன்றிய வேளாளர்கள் தொண்டை நாட்டிலிருந்து சோழநாடு வழியாகக் கொங்கு நாட்டில் குடியேறினர் என்பதைப் பட்டயங்கள் பல கூறுகின்றன. பெரியகுலத்துத் தலைவர்கள் வேணாடுடையார் பட்டயம் கீழ்வருமாறு கூறுகிறது.

'ரிஷபகிறிச் சோளன் மகனை சேரமான் பெறுமான் பாணிக்கிரகணம் பண்ணிக் கொண்ட படியினாலே சோளராசாவின் மகள் தனக்குச் சீதனம் தன் தோப்பனாரைக் கேட்டது யென்னவென்றால் யெனக்கு சிறிது வேளாளர் குடிவேணுமென்று கேட்க நாற்பத்தெண்ணாயிரம் குடிசீதனம் குடுத்தபடியினாலே சேரமான் பெறுமான் கொங்கு மண்டலத்துக்கு கொங்கு வேளாளர் என்று பேரும் குடுத்துப் பிடாரன் வேணுடையானுக்குப் பட்டாபிஷேகமும் சூட்டி யெண்ணாயிரம் கோத்திரத்துக்குப் பெரிய கோத்திரம் யெண்ணாயிரம் வீட்டுக்கும் பெரிய வீடுயென்று கொங்கு மண்டலத்துக்கு அழைத்து வந்ததன் பேரில் யிருந்த யெண்ணாயிரம் குடியும் கொங்கு மண்டலம் இருளுறைந்த காண்டாவனம் எல்லாம் வெட்டிக் கிராமம் உண்டு பண்ணி' என்பது அப்பட்டயப் பகுதியாகும்.

ஊத்துக்குழி காலிங்கராயர், பழையகோட்டை சர்க்கரை மன்றாடியார், காங்கேயம் பல்லவராயர், காடையூர் காங்கேய மன்றாடியார் வம்ச வரலாற்று ஆவணங்களும் இவ்வாறே கூறுகின்றன.

**இலக்கியம்**

பெரியகுல ஆதீனப் புலவர் கருந்தும்பிப்புலவர் மகன் திருப்பூர் க.பழனிசாமிப்புலவர் பதிப்பித்த ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சியில் வேளாளர் குடியேற்றம் பின்வருமாறு வருணிக்கப் படுகிறது.

*திக்கெலாம் மதிக்கும் சேரமான் பெருமான்*
*குருத்தணி சோழன் குறைவிலாது ஈன்ற*
*உருத்திர மணியின் உடனக மகிழ்ந்து*
*மணம்புரிந்து உலகில் வாழ்ந்திடும் நாளில்*
*குணமுடன் மகட்குக் குருத்தணி சோழன்*
*சீதன வரிசை சிலபொருள் உதவும்*
*போதினில் மகளும் பொருந்தியுள் மகிழ்ந்து*
*தந்தை தன்னுடனே சாற்றிய வசனம்*
*நந்தலில் லாத நாற்பத் தெண்ணாயிரம்*
*நற்குலத் தாரில் நாலிரு ஆறாம்*
*நிற்கிரி கடனே நீடுழி காலம்*
*மதியுடன் எங்கள் மன்சபைச் சமுகராய்*
*இதமுடன் இருக்க ஈகுவீர் என்னக்*
*கூறவும் மகிழ்ந்து குருத்தணி சோழன்*
*சேரமா னுடனே செப்புவர் சிறப்பாய்*
*மகளுரை தவறா வாய்மையால் யானும்*
*வகையுடன் வேளாண் மரபுளோர் அனுப்பில்*
*உங்களோ டொப்ப வுயர்ச்சியாய்ப் பார்க்கில்*
*அங்குயான் அனுப்ப அகம்சம் மதிப்பேன்*
*என்றவர் சொல்ல வேசேர மானும்*
*நன்றவர் நமது நாடதி பதியாய்*
*வரிசைமெய்ப் புகழுடன் வழங்குவேன் எனவும்*
*சரிசரி எனவே தரணி பாலகரில்*
*கண்ணன் ஆனங்கூர்க் காணி முத்தையனை*
*மன்னவர் சபையில் வரவழைத் தேதான்*
*எண்ணா யிரங்கோத் திரத்துளோர்க் கரசன்*
*நண்ணாகக் கொங்கு நாடதை விளக்கம்*
*செய்து தானிருப்பீர் சென்மென அனுப்ப*
*உய்யவே சேரன் உலகுக்கு வந்தார்.*

இங்கு மாதிரிக்காக ஒரு புராணமும், ஒரு பட்டயமும், ஓர் இலக்கியச் சான்றுமே காட்டப்பட்டன. நமக்குக் கிடைக்கும் எல்லாச் சான்றுகளும் சோழ நாட்டிலிருந்து வேளாளர்கள் கொங்கு நாட்டுக்குக் குடியேறியதாகக் கூறுகின்றன. மதுக்கரைச் செல்லாண்டியம்மன் கோயிலில் மூவேந்தர் இருக்கும்போது அவர்கள் ஆதரவு பெற்றுக்

காவிரி, அமராவதி, நொய்யல், பவானி ஆற்றங்கரை வழியாகக் கொங்கு நாடெங்கணும் சென்று நாடு கொன்று நாடாக்கிக் குளம்தொட்டு வளம்பெருக்கிக் கொங்கு நாட்டை வளமுறச் செய்து வேளாளர் கொங்கு வேளாளர் ஆயினர். வேளாளர் புராணமும் தொண்டை நாட்டோடு கொங்கு வேளாளர்க்கு உள்ள தொடர்பினைச் சுட்டிக் கூறுகிறது. வேளாளர் புராணம் புலவர் திரு.இல. பழனிசாமிக் கவுண்டர் அவர்கள் உரையுடன் அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்களால் பதிப்பிக்கப்படுகிறது.

இக்குடியேற்றம் சங்க காலத்திற்கு முன்னரே நடைபெற்றிருக்க வேண்டும். கொடுமணல் அகழாய்வில் ஆதன், அந்துவன், பண்ணை, சாத்தந்தை, ஆந்தை, கண்ணன் போன்ற பல கூட்டப் பெயர்கள் கிடைத்துள்ளன. கொடுமணல் நாகரிகக் காலம் கி.மு. 300 முதல் கி.பி 300 வரை என விஞ்ஞான ரீதியில் நிரூபிக்கப்பட்டுள்ளது.



கத்தாங்கண்ணி
அருள்மிகு ஆயி அம்மன்

## 2. கொங்கு நாடு

நம் செந்தமிழ் நாடு சேர, சோழ, பாண்டிய நாடுகளைப் போலவே தொண்டை நாடு, கொங்கு நாடு என்ற இரண்டு தனிப்பிரிவு நாடுகளையும் பழங்காலத்தில் தன்னகத்தே கொண்டிருந்தது.

கொங்கு நாடு தனக்கென்று எப்பொழுதும் தனியான எல்லைகள், வரலாறு, கலை, பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கம் ஆகியவைகளைக் கொண்டது. இதனைப் பழங்கால இலக்கியங்களும், கல்வெட்டுக்களும் உறுதிப்படுத்துகின்றன. நீலகிரி, கோவை, ஈரோடு, சேலம், தருமபுரி மாவட்டங்களின் பகுதிகளும், திண்டுக்கல் மாவட்டம் பழனிப் பகுதியும், கரூர் மாவட்டக் கரூர், குளித்தலைப் பகுதிகளுமே பழங்கொங்கு நாடாகும்.

*வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு*
*குடக்குப் பொருப்புவெள்ளிக் குன்று-கிடக்கும்*
*களித்தண் டலைமேவும் காவிரிசூழ் நாடு*
*குளித்தண் டலையளவு கொங்கு*

என்பது ஒரு தனிப்பாடல். இதன்மூலம் கொங்கு நாட்டின் வடக்கு எல்லை பெரும்பாலை என்பதும், தெற்கு எல்லை பழனிமலை என்பதும், மேற்கு எல்லை வெள்ளியங்கிரிமலை என்பதும், கிழக்கு எல்லை குளித்தலை என்பதும் பெறப்படுகிறது. வடக்கு எல்லை தலைமலை என்றும், தெற்கு எல்லை வராககிரி (பன்றிமலை) என்றும், மேற்கு எல்லை வாளையாறு என்றும், கிழக்கு எல்லை கோட்டைக்கரை என்றும் சில ஆவணங்கள் கூறுகின்றன.

தொண்டைநாடு, கொங்குநாடு ஆகியவைகளைச் சேர்த்துத் தமிழ்நாடு ஐந்து என்ற கருத்து முன்பே இருந்தது. தண்டியலங்காரம் என்னும் தமிழ் அணியிலக்கண நூலின் மிகப் பழமையான மேற்கோள் பாடல் ஒன்று 'வியன் தமிழ்நாடு ஐந்து' என்று கூறுகிறது.

*நறவேந்து நங்கை நலங்கவர்ந்து நல்கா*
*மறவேந்தன் வஞ்சியான் அல்லன்-துறையின்*
*விலங்காமை நின்ற வியன்தமிழ்நாடு ஐந்தின்*
*குலங்காவல் கொண்டொழுகும் கோ*

என்பது அப் பாடலாகும்.

சைவ சமய நூல்களில் மிகவும் தொன்மையானதாகக் கருதப்படுகின்ற திருமூலரின் திருமந்திரம் 'தமிழ் மண்டிலம் ஐந்து'

என்று கூறுகிறது. எனவே கொங்குநாடு தனிப்பிரிவு என்பது உறுதிப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் பல இடங்களில் 'கொங்குநாடு' தனி நாடாகக் குறிக்கப்பெறுகிறது.

இந்நாட்டு மக்கள் 'கொங்கர்' என்று சங்க இலக்கியத்தில் அழைக்கப்படுகின்றனர். சங்கப் பாடல்களில் கொங்கின் குறுநில மன்னர்கள் பலர் தனியாகக் குறிக்கப் பெறுவதுடன் கொங்கு நாட்டின் கால்நடைச் செல்வம், ஆழ்கிணறு, தண்ணீர்ப் பற்றாக்குறை, கொங்கரின் உழைப்பு, அவர்தம் போர்த்திறன் ஆகியவை பல்வேறு இடங்களில் பரக்கப் பேசப்படுகின்றன. மேலும் கொங்கு நாட்டு மணிகள், வண்ணக் கற்கள், வேலைப்பாடு மிக்க நல்ல அணிகலன்கள் புகழ்ந்து பாராட்டப் பெறுகின்றன.

சேரன் செங்குட்டுவன், தனக்குச் சமமான அரசனாகக் கொங்கு நாட்டு இளங்கோசரைத் தமிழ்நாட்டு மூவேந்தருக்கு ஒப்ப மதித்துப் போற்றியிருக்கின்றான். நூற்றவர் கன்னர், இலங்கைக் கயவாகு, மாளுவ வேந்தர், சோழன் பெருங்கிள்ளி ஆகியோர் போலக் கொங்கு நாட்டு மன்னனையும் நட்பாகக் கொண்டிருக்கிறான். இதனைச் சிலப்பதிகாரத்தின் மூலம் அறிகின்றோம்.

பேரூரை 'மேற்குக் கொங்கு' என்று பாண்டியர் பழஞ் செப்பேடும் இலக்கியங்களும் கூறுவது கொங்கு நாடு தனிநாடு என்பதாலேயாகும், கொங்கு நாட்டிலிருந்து சமய அடியார்கள் சேரநாடு நோக்கிச் சென்றதை,

> *'கொங்குநாடு கடந்துபோய்க் குலவு மலைநாட்டு எல்லையுற,*
>
> *'மலைநாடு கடந்தருளி ........... திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார்'*

எனப் பெரியபுராணம் குறிப்பிடும். சிலப்பதிகாரத்திலும் கொங்கின் மேல்பகுதி அரசர் குறிக்கப் பெறுகின்றார்.

நூற்றாண்டுகள்தோறும் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கொங்கு நாடு தனி நாடெனக் கூறுகின்றன. சிலர் தொண்டை நாட்டைச் சோழ நாட்டுடனும் கொங்கு நாட்டைச் சேர நாட்டுடனும் அடக்குவர். அது பொருந்தாது என்பது மேற்கண்ட சான்றுகளால் விளங்கும்.

'கொங்கு நாட்டு வரலாறு' எழுதிய கோவை கிழார் தன் நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

'சோழர்கள், ஒயிசளர், விசய நகரத்தார், மைசூர் மன்னர்கள் ஆகிய வம்சத்தாரிடம் கொங்குநாடு சென்றது. இக்காலங்களிலெல்லாம் வெவ்வேறு இராச்சியங்களுடன் கொங்கு நாடு இணைக்கப்பட்ட போதிலும் தனது தனிப்பட்ட வாழ்க்கையை இந்நாடு இழக்கவில்லை. இந்நாட்டின் அமைப்பு மாத்திரம் அன்றி இந்நாட்டுக் குடிகளின் பழக்க வழக்கங்களும் பண்டைக் காலம் தொட்டு ஒரே விதமாக இருந்து வந்தன. சமூக வழக்கங்களிலும் இவர்களுடைய வழக்கங்கள் ஏனைய நாட்டார்களிடமிருந்து சிறிது வேறுபட்டேயிருக்கும். இவ்விதக் காரணங்களினால் கொங்கு நாட்டைத் தனிநாடு என்று நிச்சயிக்கக்கூடும்.

சேரநாடு என்னும் கேரளத்தில் வழங்கிவரும் பழக்க வழக்கங்களைக் கொங்கு நாட்டாரின் பழக்கவழக்கங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால், எக்காலத்திலும் இவ்விரு நாடுகளும் ஒன்றாக இருந்திருக்க முடியாது என்று சொல்ல வேண்டும். கொங்குநாடு சேரநாட்டின் ஒரு பகுதியாக இருந்திருந்தால் சேரநாட்டு வழக்கம் கொஞ்சமேனும் கொங்கு நாட்டில் பரவியிருக்கும். இவையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் ஆதிகாலம் தொடங்கி இவ்விரு நாடுகளும் தனித்தனியாகவே இருந்திருக்க வேண்டும் என்றும், கொங்குநாடு ஒரு தனிநாடாகவே இயற்கையில் அமைந்து வந்ததென்றும் திண்ணமாகக் கூறலாம்' என்பது கோவை கிழாரின் கூற்றாகும்.

வராகமிகிரர் தன் நூலில் கொங்கு நாடு தனிநாடு என்று குறிக்கின்றார். அசோகன் கல்வெட்டிலும் தனி அரசராகக் குறிக்கப்பெறும் சதியபுத்திரர் கொங்கு நாட்டு மன்னன் அதியமானே என்பது ஜம்பைக் கல்வெட்டால் உறுதிப்படுகிறது.

*'ஸதியபுதோ அதியந் நெடுமாந் அஞ்சி ஈத்த பாளி'*
என்பது ஜம்பைக் கல்வெட்டாகும்.

'கொங்கு நாடு' என்னும் வரலாற்று நூலில் புலவர் அ.மு. குழந்தை அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்.

'தொன்றுதொட்டே கொங்குநாடு சேர, சோழ, பாண்டியர்களாகிய முடியுடை மூவேந்தராட்சிக்கு உட்படாத தனியாட்சி நாடாகவே இருந்து வந்தது. வேளிர் என்னும் சிறப்புப் பெயருடைய வேளாண்குடிச் செல்வராகிய கொங்குநாட்டுத் தனி அரசர்கள் தமக்குள் பகையின்றி நாட்டை ஆண்டுவந்தனர். அவர்கள் முடியுடை மூவேந்தரிடத்தும் அன்பொடு நண்பும் அமைவும் உடையவராக இருந்து வந்தனர். முடியுடை மூவேந்தர்க்கு மைத்துணரும் மாமனாருமாகிய அவர்கள் பின்னா எவ்வாறு இருந்திருப்பர். கேரளோற்பத்தி, கேரள மான்மியம்

போன்ற நூல்களும், திருவாங்கூர்ச் சரித்திர ஆசிரியர் சங்குண்ணி மேனன் அவர்களும், டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்களும் கொங்கு தனியாட்சி நாடு என்பதைத் தகக எடுத்துக்காட்டுகள் காட்டி நிறுவியுள்ளனர்'.

தொல்பொருட் சிறப்பும், கல்வெட்டுப் பரப்பும், சிற்பச் செல்வமும், வரலாற்றுப் பெருமையும், வாழ்வியல் வளமும் வற்றாச் சீரும் உடையது நமது கொங்கு நாடு. 'கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்' என்பது பழமொழி கொங்கு நாட்டார் தம் நாட்டு அளவைகளுக்குக் கூடக் 'கொங்கு' என்று பெயர் வைத்திருந்தனர். இன்றும் பல நிறுவனங்கள் 'கொங்கு' என்று பெயர் பெற்று விளங்குகிறது, இதுபோன்ற பெயரைத் தமிழகத்தில் பாண்டிய, சோழநாட்டுப் பகுதியில் எங்கும் காணமுடியாது. இது கொங்கு நாட்டுக்கே உரிய சிறப்பாகும்.

# 3. குறுப்புநாடு

## கொங்கு 24 நாடு

கொங்கு நாட்டில் குடியேறிய வேளாளர்கள், அவர்தம் குடிமக்கள் ஆகியோர் நாடெங்கும் சென்று பல ஊர்களில் காணி கொண்டு நிலையான ஆட்சியை ஏற்படுத்தினர். ஆங்காங்கு காடு அழித்து நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கினர். ஆலயங்கள் கட்டி வழிபாடு செய்து கொடைகளும் பற்பல விட்டனர். தங்களுடன் குடியேறிய குடிபடைகளுக்கும் பல உரிமைகளை அளித்தனர். கால்நடைச் செல்வத்தைக் காத்து வேளாண்மையை மேற்கொண்டனர். அப்போது நாட்டு நிர்வாகம் செய்யக் கொங்கு நாட்டை 24 உள்நாடுகளாகப் பிரித்தனர். தங்கள் பூர்வீகமான காஞ்சிபுரம் சூழ்ந்த தொண்டை நாட்டில் 24 கோட்டங்கள் இருப்பதனால் இங்கும் 24 நாடுகளாகக் கொங்கு நாட்டைப் பிரித்தனர் என்பர். சமண சமய தீர்த்தங்கரர்கள் 24 பேர். அச் சமண சமயத் தாக்கத்தாலும் 24 நாடுகளு் ஏற்பட்டன என்ற கருத்தும் உண்டு.

கொங்கு 24 நாடுகளாவன

1. பூந்துறைநாடு
2. தென்கரைநாடு
3. காங்கயநாடு
4. பொங்கலூர்நாடு
5. ஆறைநாடு
6. வாரக்கநாடு
7. திருவாவினன்குடிநாடு
8. மணநாடு
9. தலையநாடு
10. தட்டயநாடு
11. பூவாணியநாடு
12. அரையநாடு
13. ஒடுவங்கநாடு
14. வடகரைநாடு
15. கிழங்குநாடு
16. நல்லுருக்காநாடு
17. வாழவந்திநாடு
18. அண்டநாடு
19. வெங்காலநாடு
20. காவடிக்காநாடு
21. ஆனைமலைநாடு
22. இராசிபுரநாடு
23. காஞ்சிக்கோயில்நாடு
24. குறுப்புநாடு

24 நாடுகளைக் குறிக்கும் பாடல் பின்வருமாறு:

*சொல்லஅரி தானபூந் துறைசைதென் கரைநாடு*
*தோன்றுகாங் கேயநாடு*

தோலாத பொங்கலூரர் நாடுதிகழ் ஆறையணி
        தோய்ந்தவா ரக்கநாடு
வல்லமை செறிந்ததிரு வாவினன் குடிநாடு
        மணநாடு தலையநாடு
வரதட்டை பூவாணி அரையநாடு ஒடுவங்கம்
        வடகரை கிழங்குநாடு
நல்லுருக் காநாடு வாழவந் தியும்அண்ட

பாடியுள்ளார். ஒன்பதாம் நூற்றாண்டிலேயே குறுப்புநாட்டுப் பிரிவு ஏற்பட்டுவிட்டது எனலாம். குரக்குத்தளி என்பது சர்க்கார் பெரியபாளையம் ஆகும். அங்குள்ள சுக்ரீவேசுவரர் கோயில் குரக்குத்தளி என்று பெயர் பெறும். சுக்ரீவன் வந்து வணங்கியதாக ஐதீகம். இதே போல் கொங்கு நாட்டில் வாலி வணங்கிய 'வாலீசுரம்' சேவூரில் உள்ளது. அனுமன் வணங்கிய 'அனுமீசுரம்' அனுமன்பள்ளியில் உள்ளது. இவை கொங்கு நாட்டுக்குரிய தனிச்சிறப்பாகும்.

குறுப்புநாடு—குறும்புநாடு என்று மேற்கண்டவாறு முதலில் வழங்கியுள்ளது. சுந்தரர் தேவாரம் போலவே கொங்கு மண்டல சதகத்திலும் 'கொங்கில் குறும்பு' என்றே குறுப்புநாடு குறிக்கப்படுகிறது. குறும்புநாடு என்பது வலித்தல் விகாரம் பெற்றுக் குறுப்புநாடு என மாறியுள்ளது. இரும்பு+பாதை=இருப்புப்பாதை, செம்பு + குடம் செப்புக்குடம் என்பதுபோல் பெயர் பெற்றுள்ளது குறுப்புநாடு.

திருவாய்ப்பாடிநாடு என்பதும் குறுப்புநாட்டு உள்நாடுகளில் ஒன்று. அது வாய்ப்பாடி என்றும் கூறப்படும். அதன் தலைநகர் வாய்ப்பூர். விசயநகர ஆட்சிக்காலத்தில் டணாயக்கன் கோட்டை ஆட்சியின் கீழ் குறுப்புநாடு வந்ததால் கோட்டைசூழ்நாடு என்று பெயர் பெற்றது. குறுப்புநாடு சில ஆவணங்களில் குறுப்பநாடு, குருப்பநாடு குறிப்புநாடு என்னும் கூறப்பட்டுள்ளது.

**குறுப்புநாட்டு ஊர்கள்**

விசயமங்கலம், கத்தாங்கண்ணி, குன்னத்தூர், பாலத்தொழு, கொடுமணல், நல்லூர், திங்களூர், சிறுவலூர், கோசணம், ஈஞ்சம்பள்ளி, திருப்பூர், ஊத்துக்குழி, அமுக்கயம், பெரியபாளையம், சிறுக்கழிஞ்சி, தெக்கலூர், மண்ணறை, அல்லாளபுரம்,வெள்ளரிவெளி, செவியூர், அயிலூர், தாளூண்றி, முடச்சியூர், ஆதியூர், கொளப்பலூர், குருமந்தூர், கலிங்கயம், கூடலூர், செங்கப்பள்ளி, வாய்ப்பாடி, துடுப்பதி, சீனாபுரம், அலங்கியம் ஆகிய ஊர்களைக் கொண்டது குறுப்புநாடு.

குறுப்புநாட்டுககுத் தலைநகர் விசயமங்கலம். திங்களூர், குருமந்தூரைத் தலைநகராகக் கொண்டு வழங்கும் வழக்கமும் உண்டு.

*ஓங்குதமிழ் சேர்விசைய மங்கையும் கற்றைநகர்*
*ஓடைசெறி குன்றைநகரும்*
*உண்மைதிகழ் பாலதொழு கொடுமணல் நல்லூர்திங்க*
*ளூர்சிறுவ லூர்கோசணம்*
*பாங்குதிகழ் ஈஞ்சநகர் திலுப்பையூர் ஊற்றலூர்*
*பண்பான அமுக்கயமதும்*

*பார்புகழ் முகுந்தைசிறுக் கழஞ்சியூர் தெக்கலூரர்*
*பரிவான மண்ணறையுடன்*
*பூங்கமல வாவிசூழ் அல்லாள புரியுடன்*
*புகல்கின்ற வெள்ளரிவெளி*
*புனிதமிகும் செவியூர் அயிலூரர் தாளுண்றி*
*பொருந்திய முடச்சியூரும்*
*தேங்குபுகழ் ஆதியூர் கொளப்பலூரர் குருமந்தூரர்*
*தேறல்மிகு கலிங்கயமதும்*
*தென்கூட லூரர்செங்கப் பள்ளிவாய்ப் பாடியும்*
*சேர்ந்தருள் குறுப்புநாடே*

என்பது குறுப்புநாட்டு ஊர்களைக் குறிக்கும் பாடல்களில் ஒன்றாகும்.

இப்பாடலில் கத்தாங்கண்ணி – கற்றைநகர் என்று சிறப்பிக்கப்படுகிறது. குறுப்பு நாட்டில் இரண்டாவது இடத்தைக் கத்தாங்கண்ணி பெறுகிறது. கொங்குமண்டல சதக ஊர்த்தொகைப் பாடலில் கத்தாங்கண்ணி, ‘சிறந்த கற்றாங்கண்ணி’ என்று கூறப்படுகிறது.

**குறுப்புநாட்டு எல்லைகள்**

கொடுமணல் தம்பிராட்டிபாளையம் நாச்சிமுத்துப் புலவரிடம் கிடைத்த குறுப்புநாட்டுப் பட்டயம் இந்நூலாசிரியர் வெளியிட்டுள்ள ‘கொடுமணல் இலக்கியங்கள்’ ‘கொங்குநாட்டுச் சமுதாய ஆவணங்கள்’ என்னும் நூல்களில் அச்சாகியுள்ளது. அப்பட்டயத்தின் மூலப்படி ஈரோடு கலைமகள் கல்விநிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது.

அப்பட்டயத்தில் குறுப்புநாட்டு எல்லைகள் கூறப்பட்டுள்ளன.

“... யிந்த நாட்டில் சதுர்மத்தியமான விசையகிரி, அருளுமலை, திட்டமலை, வெள்ளிமலை, பவழமலை, கதித்தமலை யிந்த ஆறு மலை உள்ள நதியில் நொய்யல்நதி, வானிநதி, சவுந்தரமாநதி ஆக நதி 3 யிந்தச் சதுர்மத்தியத்தில் வடக்குக் காஞ்சிக்கூவல் நாட்டுக்குச் சேர்ந்த பாரியூரு யெல்லைக்குத் தெற்கு முடச்சியூரு யெல்லை பவழமலைக்குத் தெற்கு, பூந்துறை நாட்டுக்குச் சேர்ந்த பெருந்துறை யெல்லை கருங்கரட்டுக்கு மேற்கு, நொய்யலாற்றுக்குத் தெற்கு, வெங்கிட்டபுரத்துக்குத் தென் பாரிஷத்தில் மேல்பார்க்கு கீழ்ப் பாரிசத்தில் காங்கய நாட்டு யெல்லை சிலாசாசனக் கல்லுக்கு வடக்கு அதுக்கு மேற்கு, திலுப்பையூருக்குத் தென் பாரிஷத்தில் பொங்கலூர் நாட்டு யெல்லை நம்பியூரு யெல்லைக்கும் கிழக்குச் சதுர் மத்தியம்

குறுப்புநாடு ..'' என்பது அப்பட்டயத்தில் காணும் எல்லைப் பகுதியாகும்.

## குறுப்புநாட்டுச் சிறப்பு

குறுப்புநாட்டுப் பெருமையைச் சித்தரிக்கும் சில பாடல்கள் கிடைத்துள்ளன.

*மஞ்சள்இஞ்சி கமுகுதென்னை வளம்மிகுந்த நாடு*
*வளர்சோலை மாகதலி வாத்திக்கும் நாடு*
*தஞ்சம்என்று வந்தவரைத் தாபரிக்கும் நாடு*
*தரணிதனில் சுக்கிரன்வந்து பூசைசெய்த நாடு*
*வஞ்சிசெல்லி அத்தனூரரள் மதுரகாளி நாடு*
*வண்மையுள்ள காஞ்சிமா நதிபெருகும் நாடு*
*நஞ்சணிந்த அக்கினீ சுபரன்தன் நாடு*
*நலமான குறுப்புவள நாடுஎங்கள் நாடே*

*செந்திரு விளங்கும் கதித்தமலை அருளுமலை*
*திட்டமலை உள்ளநாடு*
*செங்ககிரி அதிசிகா மலையுடன் விசையகிரி*
*சீர்பெற விளங்கும்நாடு*
*விந்தைதிகழ் வட்டமா மலையுடன் வெள்ளிமலை*
*மிகவே விளங்குநாடு*
*வெண்சாரை கருநொச்சி காணாத சுனையுமே*
*மெய்ப்பாய் இருக்கும்நாடு*
*சுந்தரம் மிகுந்துவளர் பஞ்சவர்கள் அய்வர்*
*சுடரென விளங்குநாடு*
*தூரண்டா மணிவிளக்கு ஏற்றிவில் அடைக்கலம்*
*துலங்கியே விளங்கும்நாடு*
*கொந்துலவு காஞ்சிநதி சவுந்தரமா நதிவாணி*
*குலாவியே விளங்கும்நாடு*
*கூர்ந்தசங் கத்தையும் தாதியால் வெற்றிசெயும்*
*குறுப்புநன் னாடுதானே*

என்பன குறுப்புநாட்டைச் சிறப்பிக்கும் பாடல்களாகும்.

திங்களூர், அருள்மலை நொண்டிநாடகம் பாடிய திங்களூர் அவினாசிப் புலவர் பெருங்குறுப்புநாடு, குறுப்பு நன்னாடு என்று குறுப்புநாட்டைச் சிறப்பிப்பார். மேலும் அவர்,

*நெய்தலும் பாலை நிலத்துடன் குறிஞ்சி*
*செய்தநல் மருதம் சென்னெலும் கமுகும்*
*கட்டிமா மரமும் கதலி பலாவையும்*
*எட்டியே தாவி ஏறிய கவிகள்*
*வட்டமே கொண்டு வளங்கனி அதனை*
*புட்டெறிந் திடரசம் பொங்கியே புனலில்*
*கெண்டைமீன் வாளை கிளறு குராவினம்*
*நண்டுகூர் மரங்கள் நாட்டியம் செய்ய*
*கண்டுதான் செந்நாய் கழுகுகாக் கையினம்*
*தண்டமேல் கொண்டு தாவியே சீறி*
*நாண்டைகள் சூழ நதியில்நா ரைகளும்*
*குரண்டமேல் மூக்கால் கொத்தியே இழுத்து*
*நிறையப் புசித்து நீண்டவாய்க் காலில்*
*குறையற் றிருக்கும் குறுப்பு நாடு*

என்று குறுப்புநாட்டைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். குறுப்புநாட்டு மக்கள் தம் நாட்டுமீது பற்றுக்கொண்டவர்கள். இங்கு வழங்கிய ஒரு முகத்தல் அளவைக்கருவி குறுப்புநாழி எனப்பட்டது.

**தென்குறுப்புநாடு**

குறுப்புநாட்டில் ஊத்துக்குழி, பெரியபாளையம், நல்லூர், மண்ணறை, திருப்பூர், கத்தாங்கண்ணி, அமுக்கயம் ஆகிய 7 ஊர்களைக் கொண்டு தெற்குப்பகுதி தென்குறுப்பு நாடு என்று அழைக்கப்பட்டது. சில காலங்களில் விசயமங்கலம், கொடுமணல், பாலத்தொழு ஆகிய ஊர்களும் இதனுள் சேர்ந்துள்ளன. சில ஆவணங்கள் இதனைக் குறுப்புநாடு தென்முகம் என்றும் குறிக்கின்றன.

'கொங்கு மண்டலத்தில் குறுப்புநாட்டில் தென் குறுப்பு வீரசோழபுரநாடு'

'பனங்காடர் குலத்தில் ஆண்டராசாக்கவுண்டர் குமாரர் சோழியாண்டார்க்கு தென்குறுப்பை வீரசோழபுர நாட்டுக்கு முகுந்தை நல்லூரு, திருப்பூரு, ஊத்தலூர், மண்ணறை இந்த அஞ்சு ஆதீனம், என்பது ஆவணப் பகுதிகளாகும். சில ஆவணங்கள் வீரசோழ வளநாடு என்றும் இதனைக் கூறுகின்றன.

1183 முதல் 1206 வரை கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த கொங்குச் சோழ மன்னன் வீரசோழன் பெயரால் இப்பெயர் ஏற்பட்டிருக்க

வேண்டும். வீரசோழன் பெயரில் வீரசோழபுரம், வீரசோழன்திருமடைவளாகம், வீரசோழ நல்லூர், வீரசோழ மண்ணறை, வீரசோழச் சதுர்வேதமங்கலம் ஆகியவை கொங்கில் ஏற்பட்டுள்ளன. இருகொங்கும் (வட,தென்) ஆண்டவன் என்ற சிறப்புக்குரியவன் வீரசோழன். அவன் கல்வெட்டுக்கள் சில இப்பகுதியில் காணப்படுகின்றன.

கற்றைநகர், சிறந்த கற்றாங்காணி என்று சிறப்பிக்கப்படும். கத்தாங்கண்ணி குறுப்புநாட்டில் மிகச் சிறந்த வரலாற்றுப் புகழ் கொண்ட ஊராகும்.

## குறுப்புநாட்டுச் சபை

குறுப்புநாட்டுக்கென்று ஓர் ஆளும் சபை இருந்துள்ளது. சமூக, சமய காரியங்களுக்காக அச்சபை பலமுறை கூடியுள்ளது. கத்தாங்கண்ணி உள்ளிட்ட எல்லா ஊரவர்களும் அதில் அங்கம் வகித்துள்ளனர். அதில் முதல் காணியாளராக வெண்டுவகுலத்தார் குறிக்கப்பட்டுள்ளனர். ஒருமுறை கதித்தமலையாண்டவர் சந்நதியில் குறுப்புநாட்டுச் சபை கூடியுள்ளது.

கத்தாங்கண்ணி மிகப்பெரிதாகவும், விரிந்து பரந்தும் இருந்தது. நொய்யல் தென்கரைப் பகுதியின் மேல்புறம் பொங்கலூர் நாட்டையும் கீழ்புறம் காங்கய நாட்டையும் சேர்ந்திருந்தது.

# 4. காஞ்சிமா நதி

கத்தாங்கண்ணி நொய்யலாற்றின் இரு கரைகளிலும் அமைந்துள்ள பேரூர் 'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்பது பழமொழி. நொய்யல் கத்தாங்கண்ணிக்கு அழகூட்டுவதுடன் அதன் வளத்திற்கும் காரணமாக அமைந்துள்ளது.

கொங்கு நாட்டில் தோன்றிக் கொங்கு நாட்டில் பாய்ந்து கொங்கு நாட்டு எல்லையிலேயே காவிரியோடு கலக்கும் ஆறு காஞ்சிமாநதி என்னும் நொய்யல் ஆறு ஆகும்.

**தோற்றம்.**

கொங்கு நாட்டின் மேற்கு எல்லையாகத் திகழும் வெள்ளியங்கிரி மலைப் பகுதியில் தோன்றிப் பெரும்பாலும் கிழக்கு நோக்கிச் சுமார் 170 கிலோமீட்டர் பயணம் செய்து காவிரியோடு கலக்கிறது காஞ்சிமாநதி.

கோவை கிழார் சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார் வெள்ளியங்கிரி மலையிலிருந்து புறப்படும் காஞ்சிமா நதியை ஒரு வில்லிலிருந்து புறப்படும் அம்புக்கு ஒப்பிட்டுக் கூறுவார்.

வெள்ளியங்கிரியின் பல்வேறு பகுதியிலிருந்து புறப்படும் பல சிற்றாறுகள் ஒன்றாகச் சேர்ந்து காஞ்சிமாநதி தோன்றுகிறது. முதலில் 2000 மீட்டர் உயரத்தில் உள்ள 'ஆண்டிசுனை' நீர் காஞ்சிமாநதியில் சேர்கிறது.

மையமாக வரும் நொய்யலாற்றுக்குத் தென்பகுதியில் தர்மலிங்கம் மலை, எட்டிமடை மலை, அய்யாசாமி மலை, ஓரத்திமலை, கூத்தாண்டிமலை, குச்சிமலை ஆகியனவும், மேற்குப் பகுதியில் அத்திமலை, கரிமலை, குஞ்சரமுடி, பொறத்திமலை, வெள்ளியங்கிரி, முக்கை, தும்பிமுடி, வரடிமலை ஆகியனவும், வடபகுதியில் இடிஞ்சமலை, பெருமாள் முடி, மருதமலை ஆகியனவும் நொய்யலாற்றின் நீர்ப்பிடிப்புப் பகுதிகள் ஆகும்.

கரிமலையில் தோன்றும் பெரியாறு, கொடுவாய்ப்பள்ளம், நந்தன்கரைப் பள்ளம் இரண்டும் கூடிய சின்னாறு, இருட்டுப்பள்ளம், வெள்ளியங்கிரியில் தோன்றும் சுவாமி முடியாறு, ஆனையாறு, பூண்டியாறு, நீலிவாய்க்கால், ஓரத்திப்பள்ளம், அய்யாசாமிமலைப் பள்ளம், ஆனைப்பள்ளம், பாம்பாட்டிப்பள்ளம், சங்கனூர்ப் பள்ளம,

தடாகப்பள்ளம், திருப்பூராறு, வண்ணாற்றங்கரை, நள்ளாறு முதலிய பல சிறு ஆறுகளும், பள்ளங்களும், ஓடைகளும், அருவிகளும் காஞ்சிமாநதியோடு கலக்கிறது. முட்டம் அருகேயுள்ள ஒரு துணையாற்றுக்கு இன்றும் காஞ்சிமாநதி என்றே பெயரிட்டு அழைக்கின்றனர்.

**கொங்குநாட்டு ஆறுகள்**

கார்மேகக் கவிஞரின் கொங்குமண்டல சதகமும், வாலசுந்தரக் கவிராயரின் கொங்குமண்டல சதகமும் கொங்குநாட்டு ஆறுகளைத் தொகுத்துக் கூறுகின்றன.

| | |
|---|---|
| திருமணிமுத்தாறு | நள்ளாறு |
| தொப்பையாறு | சண்முகநதி |
| காவிரியாறு | பாலையாறு |
| பவானியாறு | வாளையாறு |
| செய்யாறு | காரியாறு |
| காஞ்சியாறு | குடவனாறு |
| ஆண்பொருநையாறு | சண்பகநதி |
| | சிற்றாறு |

என்பன அவ்வாறுகளாகும். இதனை,

*திருமணி தொப்பைபூங் காவேரி வானியும் செய்யநதி*
*தருமணி காஞ்சி பொருநைநள் ளாறொடு சண்முகமும்*
*குருமணி பாலை நதிவாளை காரி குடகனதி*
*வருமணி சண்பகம் சிற்றாறு சூழ்கொங்கு மண்டலமே*

என்ற சதகப்பாடல் விளக்கும். இங்கு 15 ஆறுகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

காஞ்சியாறு இலக்கியப் புகழ்படைத்தது.

*மலிபுனல் நிகழ்தரும் தீநீர் விழவில்*
*பொழில்வரி வேனில் பேரெழில் வாழ்க்கை*
*மேவரு சுற்றமொடு கண்டினிது நுகரும்*
*தீம்புனல் ஆயம் ஆடும்*
*காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே*

என்பது பதிற்றுப்பத்துப் பாடலாகும்.

முற்காலப் பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகனின் சீவரமங்கலச் செப்பேட்டில்

*மீ கொங்கில் காஞ்சிவாய்ப் பேரூர் புக்குத்*
*திருமாலுக்குக் குன்றமன்னதோர் கோயிலாக்கியும்*

என்று கூறப்படுகிறது.

கொங்கு நாட்டுக்கு மூன்று முறை தல யாத்திரை வந்தவரும், குறுப்புநாட்டுப் பெரிய பாளையத்தைக் குரக்குத்தளி என்று பாடி மகிழ்ந்தவருமாகிய தேவாரம் பாடிய சுந்தரர்,

*மீ கொங்கில் அணி காஞ்சிவாய்ப் பேரூர்ப்*
*பெருமானைப் புலியூர்ச்சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே*

என்று சிதம்பரப் பதிகத்தில் பாடியுள்ளார்.

குறுப்புநாடு, காங்கய நாடு பற்றிய பாடல்களில்,

*'கொந்துலவு காஞ்சிநதி சவுந்தரமா நதிவானி*
*குலாவியே விளங்குநாடு*
*கூர்ந்தசங் கத்தையும் தாதியால் வெற்றிசெயும்*
*குறுப்புநன் னாடுதானே'*
*'கனசென்னிமலை காஞ்சியான் பொருநை சூழ்கின்ற*
*காங்கயநல் நாடுதானே'*

என்ற குறிப்புக்கள் வருகின்றன.

கல்வெட்டில் 'எழுகரைநாடு' என்ற தொடர் பயின்று வருகிறது. அருணகிரியாரும் 'எழுகரை நாட்டவர் தம்பிரானே' என்று முருகனைப் பாடுகிறார்.

மோரூர்க் காங்கேயர் ஏடு என்னும் ஓலைப் பட்டயம்,

*'கொங்கு மண்டலத்திலே தெட்சண கைலாசமாகிய*
*அரவகிரியைச் சூழ்ந்த காவேரி, பவாணி, திருமணிமுத்தாறு,*
*அலகுமுரிச்சான், தொப்பை, ஆம்பிராநதி, நொய்யல் ஆக*
*சத்தநதியாகிய எழுகரைநாடு'*

என்ற கூறுகிறது.

மக்கென்சியின் ஆவணம் ஒன்று ஏழு ஆறுகளுடன் ஏழு பாடல்பெற்ற சிவாலயங்கள் உள்ள காரணத்தால் எழுகரைநாடு என்று

பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. 'வாணி நொய்யல் காவேரி ஆன்பொருந்தம் ஆளியாறு திருமணிமுத்தாறு தொப்பையாறு ஆக நதி ஏழு, சிவாலயத்துக்கு வரலாறு கரூர், வெஞ்சமாங்கூடல், கொடுமுடி, திருநண்ணா, திருமுருகன்பூண்டி, பேரூர் ஆக திருப்பாடல் பெற்ற திருப்பதி ஏழு, நதியும் ஏழு படை வீடும் ஏழு உண்டானபடியாலே கொங்கு மண்டலம் எழுகரை நாடாகச் சொல்லப்படுகிறது' என்பது மக்கென்சியின் ஆவணப்பகுதியாகும். எல்லாத் தொகுப்புக்ளிலும் காஞ்சிமா நதியாகிய நொய்யல் தவறாமல் இடம்பெற்றிருப்பது சிறப்புக்குரியது ஆகும்.

**காஞ்சி**

நொய்யலாற்றுக்குக் காஞ்சி என்பதே பழம்பெயர். பரணர் என்னும் சங்ககாலப் புலவர் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாடிய பதிற்றுப்பத்து என்னும் சங்க கால இலக்கியத்தின் ஐந்தாம் பத்தில் காஞ்சியாறு பற்றிப் பாடுகிறார்.

'வேனில் காலத்தில் கொண்டாடப்படும் நல்ல நீர்விழாவின்போது கொங்கு நாட்டு மக்கள் தங்கள் வீடுகளில் தங்காமல் சுற்றத்தார்களுடன் அழகிய சோலையில் தங்கி இன்பமாகப் பொழுதைப் போக்கி நீராடி உண்டு மகிழும்படியான காஞ்சியாற்று மணலினும் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் வாழ்நாட்கள் மிகுவதாகுக' என்கிறார் பரணர். இப்பாடலை இப்பகுதியில் முன்பு கண்டோம்.

கொடுமணல் இலக்கியங்களில்,

*'சோலைசூழ்திருக் காஞ்சிமாநதி*
*துலங்க வந்தருள் தேவனே'*
*'காஞ்சிமாநதி தன்னிலேவளர்*
*கன்னி மாமயில் அன்னமே'*
*'சிறந்த தாம்திருக் காஞ்சி நதியில்*
*வளரும் செல்வத் துரைமகள்'*

என்று காஞ்சிமாநதி குறிக்கப்படுகிறது.

*'மண்பரவும் காஞ்சிநதி'*
*'ஆலிக்கும் திருக்காஞ்சிநதி'*
*'மணக்கும் திருக்காஞ்சி'*
*'செய்யபுகழ்க் காஞ்சி'*
*'அருள்பரவும் காஞ்சி'*

என்று பல்வேறு இலக்கியத் தொடர்கள் காஞ்சிமாநதியைப் புகழுகின்றன.

பூந்துறை நாட்டின் எல்லை கூறும் புராணப் பாடலில் அதன் தெற்கு எல்லையாக

*'உன்னிய தெற்கில் காஞ்சி'*

என்ற தொடர் காணப்படுகிறது.

பேரூர் மடத்துச் செப்பேடு, பேரூர்ச் செப்பேடு, தென்கரை நாட்டுப்பட்டயம், கொங்கு காணியான பட்டயம், வேட்கோவர் 24 நாட்டுப்பட்டயம் ஆகியவற்றில் காஞ்சியாறு என்ற தொடரே பயின்று வறுகிறது.

விசயநகர மன்னன் இராமதேவ மகாராயர் பிரதிநிதியாக மதுரையில் முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிபுரியும்போது கி.பி. 1621 ஆம் ஆண்டு பழையகோட்டைப் பட்டக்காரர் விசுவநாதச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் 'காஞ்சிநதி தீரத்தில் நவபிரதிட்டையாக அணையும் வாய்க்காலும் கண்டு' பணி செய்ததாக நத்தக் காரையூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

காஞ்சிமாநதி என்ற பெயர் முட்டம் அருகே ஒரு சிற்றாறுக்குப் பெயராக வருகிறது. நன்காஞ்சி (நங்காஞ்சி) என்ற ஆறு கொங்கு நாட்டின் தென்பகுதியில் ஓடுகிறது. கொங்கு 24 நாடுகளில் ஒரு நாடு காஞ்சிக்கோயில் நாடு என்று பெயர் பெற்றுள்ளது. பூந்துறை நாட்டின் ஒரு பகுதி காஞ்சித் துண்டம், காஞ்சிக்கூவத் துண்டம் எனப்படுகிறது.

இவ்வாறு காஞ்சி என்ற பெயரைப் பல இடங்களில் காணுகிறோம்.

**நொய்யல்**

காஞ்சிமாநதி என்ற பெயர் மறைந்து இன்று நொய்யலாறு என்ற பெயரே வழங்கிவருகிறது.

கி.பி. 13–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கொங்குச் சோழன் விக்கிரம சோழன் (1283), கொங்குச் சுந்தரபாண்டியன் ஆகியோரின் சர்க்கார் பெரியபாளையம் சுக்ரீவேசுரன் கோயில் கல்வெட்டில்,

*'நள்ளாறும் நொயிலாறும் கூடும் மூலை'*

என்றும்,

*'நொய்யலாற்றில் இந்தவரி அணையும் அடைத்துக்*
*காலும் வெட்டிக் குளமும் அடைத்துப் பயிர் செய்து'*

என்றும் கூறப்படுகிறது.

வள்ளிஎறிச்சல் தொண்டைமாக்கவுண்டர் வரலாற்றுக் குறிப்பில் 'நொய்யல் ஆறு' என்ற குறிப்பு வருகிறது. கொங்கு காணியான

பட்டயம், குறுப்புநாட்டுப் பட்டயம், தென்கரைநாட்டுப் பட்டயம், முத்தூர்ப் பட்டயம், மோரூர்க் காங்கேயர் ஏடு போன்றவற்றிலும் ‘நொய்யல்’ என்ற பெயரே பயின்று வருகிறது.

காஞ்சி என்ற பெயர் 13–ஆம் நூற்றாண்டில் நொயில், நொய்யல் என்று அழைக்கப்பட்டுள்ளது. இம்மாற்றம் எப்படி ஏற்பட்டது என்பது ஆய்வுக்குரியது. நொய்யல், காஞ்சி என்ற இரு பெயர்களும் ஒரே காலத்தில் வழங்கியுள்ளது.

**நொய்யல் பெயர்க் காரணம்**

நொய்–என்றால் நுண்மை, சிறுமை, மென்மை, மிருது என்று பொருள் உண்டு. உடைந்த அரிசிக் குறுணைக்கு ‘நொய்க்குறுணை’ என்று பெயர். கோதுமை ரவையைக் ‘கோதுமை நொய்’ என்பர். தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய சேனாவரையர் ‘நொய்யும் நுறுங்கும்’ நீக்கிச் சோறு சமைத்தல் பற்றிக் குறித்துள்ளார். கற்களே இல்லாத மென்மையான மணலுக்கு ‘நொய்மணல்’ என்று பெயர்.

‘நொய்’ என்பதற்குச் சூடாமணி நிகண்டு இலேசு என்ற பொருளும் கூறுகிறது. ‘குறுநெய்’ என்ற தொடரைத் திவாகர நிகண்டு எடுத்துக்காட்டுகிறது. அதுவே என்று ‘குறுணை’ என்று மாறிவிட்டது. ‘நொய்யரிசி கொதி தாங்காது’ என்ற பழமொழியும் உண்டு. நொறுங்கிய அரிசித் துணுக்கை ‘நொய்’ என்று அபிதான சிந்தாமணி கூறும்.

நுண்மையான, சிறிய, மென்மையான, கல் கலக்காத மணல் காஞ்சியாற்றில் கிடைப்பதால் – காஞ்சி – நொய்யல் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். கொங்குநாட்டின் நொய்யல் கரைப் பகுதியில் கட்டிடம் கட்டுவோர் நொய்யலாற்று மணலைச் சல்லடையில் சலிக்காமல் அப்படியே காரைக்குப் பயன்படுத்துவதைப் பார்க்கலாம்.

கோவைகிழார் சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார் ‘காஞ்சிமாநதி’ என்னும் தம் நூலில்,

> “நொய் போலச் சிறியவள் நான். கங்கை, யமுனை, சிந்து, கோதாவிரி, கிருஷ்ணா, காவிரி, நர்மதை போன்ற பெரிய ஆறுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நானோ மிகச் சிறியவள். நொய் போன்றவள் தானியத்தில் நொய்யிற்குச் சத்து மிகுதி. அதுபோல் அந்தப் பேராறுகளில் ஆயிரத்தில் ஒரு பங்கும் மக்களுக்குப் பயன்படுவதில்லை. நானோ நூற்றுக்கு நூறு பயன் தருவேன். அதில்தான் சிறப்பு இருக்கிறது. ஆகவே நொய்யல் என்ற பெயரே எனக்கு விருப்பம்’

என்று நொய்யலாறே பேசுவதாக எழுதியுள்ளார். நொய்யல் காவிரியோடு கலக்கும் இடத்தில் ஊர்ப்பகுதிக்கும், அருகில் உள்ள இரயில் நிலையத்துக்கும் ‘நொய்யல்’ என்றே பெயர்.

# 5. கத்தாங்கண்ணி

கத்தாங்கண்ணி என்ற ஊர்ப்பெயர் 'கற்றான்காணி' என்ற சொற்றொடரின் மரூஉமொழி என்றே ஆய்வாளர்கள் பொதுவாகக் கருதுகின்றனர். படித்த அறிஞருக்கு அல்லது கற்றறிந்த ஒரு புலவருக்குக் காணியுரிமையாகக் கொடுக்கப்பட்ட ஊர் என்றே கூறுகின்றனர்.

வேளாண்காணி என்பது வேளாளருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம். அதனைச் சார்ந்த ஊர் வேளாண்காணி என்பது—வேளாங்கண்ணி ஆனதைப் போலவே கற்றான்காணி என்ற ஊர் கத்தாங்கண்ணி ஆயிற்று.

கத்தாங்கண்ணி நொய்யலாற்றுக்கு வடக்கிலும் தெற்கிலும் நீண்டு பரந்துகிடக்கும் ஓரூராகும். நொய்யலாற்றின் வடகரையில் உள்ள கத்தாங்கண்ணியைச் சர்க்கார் கத்தாங்கண்ணி, அக்கிரகாரக் கத்தாங்கண்ணி என்ற இரு பிரிவுகளாகப் பிரிப்பர். ஆயி அம்மன் கோயில் உள்ள பகுதி சர்க்கார் கத்தாங்கண்ணி என்பதாகும். அக்கிரகாரக் கத்தாங்கண்ணி என்பது இன்று வழக்கத்தில் இல்லை. முல்லை நாயக்கனூர் என்று இன்று அழைக்கப்படும் பகுதியே அக்கிரகாரக் கத்தாங்கண்ணி ஆகும்.

சர்க்கார் கத்தாங்கண்ணி என்பது குறுப்புநாட்டுச் சபையில் அங்கம் பெற்று அரசுக்கு இறை (வரி) செலுத்தும் ஊர்ப்பகுதியாகும். அக்கிரகாரக் கத்தாங்கண்ணி என்பது அந்தணர்கட்குக் கொடையாக அளிக்கப்பட்ட பகுதியாகும். ஒருகாலத்தில் அந்தணர்கள் இப்பகுதியில் சிறந்து வாழ்ந்திருக்க வேண்டும். கத்தாங்கண்ணிக் கல்வெட்டுக்களில் பிரமபல்லவரையர், பாரத்வாசி அரியபொருள் விண்டுவரப்பெருமாள் ஆன விக்கிரமபாண்டியப் பிரம்மராயர், விசுவாமித்திரன் திருநாராயணபுரத்துப் பிள்ளை ஜகந்நாத பிரமாதிராயர், நரையனூர் நாட்டு உடையபிராட்டிச் சதுர்வேதமங்கலத்துப் பிராமணன் ஆகியோர் சிறப்புடன் குறிக்கப்பட்டுள்ளனர். பிற்காலத்தில் எழுதப்பட்ட கத்தாங்கண்ணிப் பட்டயத்திலும் பிராமணர் மச்சமலை ராமய்யர், அக்கிரகாரம் பிராமணர் ரெங்கய்யர் ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர்.

கத்தாங்கண்ணிக்கு வீரசோழச் சதுர்வேதமங்கலம் என்ற வேறு பெயர் வழங்கியதைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. நான்கு வேதங்களை ஓதக்கூடிய அந்தணர்கள் வாழும் இடங்களே சதுர்வேதமங்கலம் என்று அழைக்கப்படும். ஆகவே கொங்குச் சோழர்

நாளிலிருந்து போசள மன்னர் மூன்றாம் வீரவல்லாளன், உம்மத்தூர்த் தலைவன் வீரநஞ்சராயன் காலம் வரை இங்கு அந்தணர் பலர் வாழ்ந்த குடியிருப்புக்கள் இருந்தன என்பது திண்ணம். அக்காலம் கி.பி. 11–ஆம் நூற்றாண்டு முதல் 16–ஆம் நூற்றாண்டுத் தொடக்கம் வரை உள்ள காலமாகும்.

நொய்யலாற்றங்கரையில் தொல்பொருட் சிறப்பு வாய்ந்த பல ஊர்கள் உள்ளன. முட்டம், பேரூர், கோவை, சிங்கநல்லூர், சூலூர், சர்க்கார் பெரியபாளையம், கொடுமணல போன்ற நொய்யல்கரை ஊர்கள் பலவற்றில் தொல்பழங்காலத் தொல்பொருட்கள் கிடைக்கின்றன. கொடுமணலில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையினர் ஐந்து பருவங்களில் அகழ்வாராய்ச்சி நடத்தித் தொல்பொருட்கள் பலவற்றை எடுத்துள்ளனர். அரிய வண்ணக் கல்மணிகளும், பாசிகளும், சங்கு அணிகலன்களும், இரும்பு–எஃகு ஆயுதங்களும், சுடுமண் பொருள்களும் அங்கு கிடைத்துள்ளன. நூற்றுக்கு மேற்பட்ட பானை ஓடுகள் பண்டைய தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டவை கிடைத்துள்ளன. அப்பகுதியில் உரோமானியர் தொடர்பும் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

அதே போன்ற பொருட்கள் கத்தாங்கண்ணியிலும் கிடைக்க வாய்ப்புள்ளது. 1980 ஆம் ஆண்டு ஈரோடு கலைமகள் கல்விநிலைய நிர்வாகி செல்வி எம்.முத்தையா அவர்கள் இந்நூலாசிரியருடனும், கலைமகள் கல்வி நிலைய மாணவிகளுடனும் கத்தாங்கண்ணி ஈசுவரன்கோயில், பெருமாள் கோயில் தென்புறம் அருகில் உள்ள மேடுகளில் மேற்பரப்பாய்வு செய்து பல தொல்பொருட்களை எடுத்துள்ளனர். அவை ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. எனவே கத்தாங்கண்ணியின் தொல்பழங்கால நாகரிகம் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3 ஆம் நூற்றாண்டு வரை சிறந்து விளங்கியது எனலாம். கொடுமணல் கத்தாங்கண்ணிக்கு மிகவும் அருகிலேயே உள்ளது.

கத்தாங்கண்ணி குறுப்புநாட்டு ஊராகக் குறுப்புநாட்டு ஊர்த்தொகைப் பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. இது நொய்யல் ஆற்றின் வடகரையில் உள்ள சர்க்கார் கத்தாங்கண்ணி, அக்கிரகாரக் கத்தாங்கண்ணி பகுதிகளாகும். பொங்கலூர் நாட்டு ஊர்த்தொகைப் பாடலிலும் கத்தாங்கண்ணி குறிக்கப்பட்டுள்ளது.

பாப்பினியில் உள்ள பச்சோட்டாவுடையார் சிவன் கோயில் கல்வெட்டில்,

'ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலீசுவரன் இராயர் மகாராயர் தேவராய

உடையார் குமாரர் அரியராய உடையாற்குச் செல்லாநின்ற சர்வதாரி வருஷத்து தை மாதம் 25 தேதி காங்கேயந் நாட்டு நாட்டவர் எங்கள் நாட்டில் பாற்பதியூருடைய நாயனார் பச்சோட்டா உடையார்க்கு கல்வெட்டிக் குடுத்த பரிசாவது எங்கள் நாட்டு ஆலாம்பாடியும் கற்றாயன்காணியிலே'

என்ற தொடர் காணப்படுகிறது. கொங்கு நாட்டுப் பண்டைய பூகோளம் பற்றி விரிவான நூல் எழுதியுள்ள கோவை திரு கே.எஸ். வைத்தியநாதன் அவர்கள் தம் நூலில் கத்தாங்கண்ணி காங்கய நாட்டிலும் சேர்ந்திருந்தது என்று எழுதியுள்ளார்கள். இதன்மூலம் நொய்யலாற்றுக்குத் தென்புறம் உள்ள கத்தாங்கண்ணி மேல்பகுதி பொங்கலூர் நாட்டிலும், கீழ்ப்பகுதி காங்கய நாட்டிலும் சேர்ந்திருந்தது என அறிகின்றோம்.

இவ்வாறு குறுப்புநாடு, பொங்கலூர்நாடு, காங்கயநாடு ஆகிய மூன்று நாடுகளிலும் கத்தாங்கண்ணி இடம்பெற்றிருந்தது தெரிகிறது. இது வேறு எந்தக் கொங்கு நாட்டு ஊருக்கும் இல்லாத தனிச்சிறப்பாகும்.

ஆற்றிற்கு இருபுறமும் கத்தாங்கண்ணி இருந்ததால் 'இக்கரைக் கத்தாங்கண்ணி', 'அக்கரைக் கத்தாங்கண்ணி' என்ற பெயரிலும் அழைக்கப்பட்டது என்பதை ஒரு செப்பேடு சுட்டிக் காட்டுகிறது.

கத்தாங்கண்ணியை (கற்றான்காணி) கற்றை என்று புலவர்கள் சுருக்கி அழைத்தனர். மற்றும் இலக்கியங்கள்

*கற்றை நகர்*
*சிறந்த கற்றான்காணி*
*பரவும் கற்றான்காணி*
*ஏவல் கற்றான்காணி*

எனப் பலவாறு இவ்வூரைச் சுட்டுகிறது. காத்தான்காணி, கத்தான்காணி என்று சிலர் குறிக்கின்றனர். கல்வெட்டுக்களில் கற்றாயன்காணி என்ற தொடர் பயின்றுவருகிறது.

*கத்தாங்கண்ணிச் செப்பேடு*
*கொடுமணல் பட்டயம்*
*கொங்கு காணியான பட்டயம்*
*குறுப்புநாட்டுப் பட்டயம்*
*காடையூர்ப் பட்டயம்*

போன்ற பல வரலாற்று ஆவணங்களில் கத்தாங்கண்ணி குறிக்கப்பட்டுள்ளது.

32 ஊர்களையுடைய குறுப்பு நாட்டின் தென்பகுதி வீரசோழநாடு. வீரசோழபுர நாடு, வீரசோழவளநாடு என்றும் அழைக்கப்பட்டது.

தென்குறுப்பு வீரசோழபுரநாடு என்பது பட்டயப்பகுதி. அப்பகுதியில் திருப்பூர், நல்லூர், மண்ணறை, பெரியபாளையம், ஊத்துக்குழி, கத்தாங்கண்ணி, கொடுமணல் ஆகிய ஊர்கள் அடங்கியிருந்தன. சில சமயம் அமுக்கயமும் அந்நாட்டுப் பகுதியில் அடங்கியிருந்தது. சில ஆவணங்களைக் கூட்டாக இவர்கள் எழுதியுள்ளனர். அதில் கையொப்பமிட்டுள்ளனர்.

வீரசோழநாடு, வீரசோழச் சதுர்வேத மங்கலம் என்ற பெயர்கள் கொங்குச் சோழ மனனன் ராஜாதிராஜ வீரசோழன் பெயரால் ஏற்பட்டவை. அவன் ஆட்சிக்காலம் கி.பி. 1117 முதல் 1135 வரையிலாகும். கத்தாங்கண்ணி 18 ஊர்கள் அடங்கிய பெரும் கிராமமாகும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | கத்தாங்கண்ணி | 10. | தொட்டியபாளையம் |
| 2. | சர்க்கார் கத்தாங்கண்ணி | 11. | முல்லை நாயக்கனூர் |
| 3. | அக்கிரகாரக் கத்தாங்கண்ணி | 12. | அருகம்பாளையம் |
| 4. | பாப்பம்பாளையம் | 13. | சுப்பனூர் |
| 5. | வெங்கலப்பாளையம் | 14. | அணைப்பாளையம் |
| 6. | பாரப்பாளையம் | 15. | பள்ளராம்பாளையம் |
| 7. | ரட்டிபாளையம் | 16. | தாசநாயக்கனூர் |
| 8. | வாலசமுத்திரம்புதூர் | 17. | தட்டைக்குளம் |
| 9. | கரைப்புதூர் | 18. | பாறையூர் |

என்பன அப்பதினெட்டு ஊர்களாகும். ஒரு ஆவணத்தில் புல்லூர் என்ற ஊர்ப்பகுதியையும் காணுகிறோம்.

பண்டைக் காலத்தில் நொய்யலாற்றில் 32 அணைகள் இருந்தன. அவற்றுள் கத்தாங்கண்ணி அணை ஒன்று. அணைப்பாளையம் குளமும் நொய்யல் நீர் பெறுகிறது. நொய்யலில் நீர் தூய்மையாக வந்த காலத்தில் அதனால் வேளாண்மை மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இன்று நொய்யல் நீர் மாசு படிந்த காரணத்தினால் நொய்யல் நீர் வேளாண்மை பொய்யாய்—பழங்கதையாய்ப் போய்விடுமோ என்ற அச்சம் ஏற்பட்டுள்ளது.

# 6. ஆயிஅம்மன் கோயில்

## தாய்த் தெய்வத் தொன்மை

அன்னை–சக்தி–தாய்த்தெய்வ வழிபாடே உலகின் மிகத் தொன்மையான வழிபாடாகும். இந்தியாவின் பல்வேறு இடங்களிலும், அரப்பா, மொகஞ்சதாரோ போன்ற அகழ்வாராய்ச்சி நடைபெற்ற இடங்களிலும் தாய்த்தெய்வ வழிபாடும், அன்னை வழிபாடும், சக்தி வழிபாடும் மூல வழிபாடாகவும், தொன்மையான வழிபாடாகவும், முழுமுதல் வழிபாடாகவும் விளங்குகிறது. இந்தியாவில் மட்டுமின்றி சிரியா, எகிப்து போன்ற பிற வெளிநாடுகளிலும் பெண் தெய்வ வழிபாடே பண்டைநாளில் மிகுதியாக இருந்துள்ளது. அன்னை வழிபாட்டு நாகரிகம் பாரசீகம், கிரேக்க, உரோமானிய நாடுகளிலும் பரவி இருந்தமைக்குரிய பல சான்றுகள் கிடைத்துள்ளன.

தமிழ்நாட்டுப் பண்டைய இலக்கியங்களான சங்க இலக்கியங்களிலும் கொற்றவையாகிய அன்னையைக் காடுகளின் நடுவே வாகை மரத்தின் அடியிலும், வேப்ப மரத்தின் அடியிலும் எழுந்தருளச் செய்து நம் முன்னோர் வணங்கினர். கொற்றி, கொற்றவை, சூலி, மலைமகள், பழையோள், துணங்கை, கானமர்செல்வி, காடுகாள், வடவாயிற் செல்வி என்ற பற்பல பெயர்களில் அன்னைத் தெய்வம் அழைக்கப்பட்டன என்பதைச் சங்க இலக்கியங்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

பேசும் மொழியை, வாழும் நாட்டை, தேடிய செல்வத்தை, பெற்ற கல்வியை, காட்டும் ஆண்மையை, பெறும் வெற்றியைத் தாயாகவே உருவகம் செய்து வழிபட்ட தொன்மைச் சமுதாயம் நமது தமிழ்ச் சமுதாயம்.

கத்தாங்கண்ணி வெண்டுவகுலப் பெருமக்கள் ஆயிஅம்மன் என்னும் சிறப்புப் பெயரில் தம் குலதெய்வத்தை எழுந்தருளச் செய்து வழிபட்டு வருகின்றனர்.

கொங்கு நாட்டு வழக்கப்படி தீபத்தம்பம் கோயிலின் வெளிப்பக்கம் அமைந்துள்ளது. நான்குகால் மண்டபத்தின் மையத்தில் தீபத்தம்பம் ஓங்கி உயர்ந்து காணப்படுகிறது. தீபத்தம்பத்தின் தென்புறம் அம்மனும், மேற்குப்புறம் திரிசூலமும், வடபுறம் காவல் தெய்வமான கருப்பண்ணனும், கிழக்குப்புறம் விநாயகரும் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளனர்.

கார்த்திகை தீபத்தின்போது தீபத்தம்பத்தில் தீபம் ஏற்றுவர். உடுமலைப்பேட்டை வட்டத்தைச் சேர்ந்த தேவனூர் புதூர் ஞானமுருகன் மக்கள், அண்ணன் மக்கள் வகையராவினர் விளக்கேற்றும் பரம்பரையுரிமையுடையவர்கள்.

கோயிலின் முன்பு இரண்டு குறிஞ்சிகள் உள்ளன. வடபுறம் உள்ள முன் குறிஞ்சியில் 4 கால் மண்டபம் உள்ளது. தூணின் தென்புறம் அம்மனும், மேல்புறம் தண்டபாணியும், வடபுறம் அம்மனும், கீழ்புறம் விநாயகரும் உள்ளனர்.

தென்புறக் குறிஞ்சியில் 4 கால் மண்டபம் உள்ளது. தூண்களில் ஆண், பெண் உருவங்கள் உள்ளன. அவை வெண்டுவன் குல முன்னோர்களாக இருக்கலாம். குறிஞ்சிகளில் கல்வெட்டுக்கள் உள்ளன. அவை அடுத்த பகுதியில் காட்டப்பட்டுள்ளன.

இரண்டு நந்திகள் உள்ளன. அம்மன் கோயில்களில் நந்தி அமைவது மிகவும் சிறப்பானதாகும். தஞ்சையில் மாமன்னன் முதலாம் இராசராசன் (985–1014) காலத்தில் 'நந்திபிடாரி' கோயில் அமைக்கப்பட்டதாகத் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது. அதற்கேற்பத் தஞ்சை–வெண்ணாற்றங்கரைச் சாலையில் உள்ள கோடியம்மன் கோயிலில் இன்றும் நந்தி வாகனம் உள்ளது.

சிம்ம வாகனம் உள்ள மகாமண்டபம் மிக விசாலமாக அமைக்கப்பட்டுள்ளது. மகாமண்டப விதானத்தில் ராகு, கேது சிற்பமும், முகப்பில் கஜலட்சுமி சிற்பமும் முறைப்படி அமைக்கப்பட்டுள்ளது. ஆண், பெண் பூதங்கள் உள்ளன. அர்த்தமண்டபத்தின் மேல்புறம் கிழக்கு நோக்கி விநாயகர் எழுந்தருளியுள்ளார்.

கருவறையில் காணியாளர்கள் வெண்டுவ குலத்தாரின் கண்கண்ட தெய்வமாக, வேண்டுவார்க்கு வேண்டியவற்றை வேண்டியாங்கு அருளும் அன்னை, கொடிய சக்திகளின் வடிவாம் அரக்கனை அழித்த திருக்கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் வீற்றிருக்கும் காட்சியைக் காணலாம். இடக் கைகளில் பாசமும், கபாலம் என்னும் அமுத பாத்திரத்தையும், வலக்கைகளில் சூலத்தையும், நாகரையும் தாங்கி அம்மன் எழுந்தருளியுள்ளார்.

நாள்தோறும் உச்சிக்காலம் ஒருவேளை பூசை முறைப்படி நடைபெறுகிறது. காணியாளர்களும் அடியார்களும் விரும்பியபோது பூசை செய்து வழிபட்டுச் செல்லலாம். மார்கழி 30 நாட்கள் பூசையும், திருவாதிரைச் சிறப்பு வழிபாடும் சிறப்புடன் நடத்தப்படுகிறது. கார்த்திகை தீபம், சிவன் ராத்திரி, வருடப்பிறப்பு சித்திரைக்கனி,

அமாவாசை, பவுர்ணமி நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்படுகின்றன.

1952–இல் குடமுழுக்கு விழா நடைபெற்றது. திருச்சுற்றில் வடகிழக்குப்புறம் தீர்த்தக்கிணறு ஆழ்துளைப் பம்புகள் அமைக்கப்பட்டுக் கோயிலில் தண்ணீர்வசதி. மிகச் சிறப்புடன் செய்யப்பட்டுள்ளது.

மேற்கேயுள்ள சாவடி (மடம்) கல்யாண மண்டபமாகத் திருத்தி அமைக்கப்பட்டுள்ளது. திருச்சுற்றில் நந்தவனம் அமைக்கப்பட்டு வழிபாட்டுக்கு வேண்டும் மலர்கள் பயிர் செய்யப்பட்டுள்ளன.

1993 ஆம் ஆண்டு ஆவணி 29 ஆம் நாள் பாலாலயம் அமைக்கப்பட்டுத் திருப்பணி வேலைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. கோயில்காடு, ஆண்டிகாடு பகுதிகளில் 10 ஏக்கர் மானிய பூமி ஆயிஅம்மன் கோயிலுக்கு உள்ளது.

கடந்த காலத் திருப்பணியில் கத்தாங்கண்ணிக் காணியாளர்களான செவந்தி குலத்தார் ஆயிஅம்மன் கோயில் திருப்பணிக்குக் கொடை அளித்ததும், அந்நிகழ்ச்சி கல்வெட்டில் பொறிக்கப்பட்டிருப்பதும் சிறப்புமிக்கதாகும். ஆயிஅம்மன் கோயில் திருப்பணிகட்குக் காணியாளர்கள் தாராளமாக நன்கொடை அளித்து வருகின்றனர்.

வணிகத்தின் பொருட்டும், அலுவல் நிமித்தமாகவும், வேறு பல்வேறு காரணங்களினாலும் காணியூர்களைவிட்டு வெளியூர் சென்ற காணியாளர்கள் தாய்ப் பசுவை நோக்கிவரும் கன்றுகள் போல் குலதெய்வக் கோயிலுக்கு வந்து வழிபாடு செய்து பேறுகள் பெறுகின்றனர்.

ஆயிஅம்மன், ஆயிஅப்பன், ஆயிக்கவுண்டர், ஆயி நயினார் என்று மக்களுக்கும் ஆயிபாளையம், ஆயிக்குடி என்று ஊர்களுக்கும் பெயர்வைத்து மகிழ்ந்தனர். முன்பு குல குருக்களும், கோயில் பண்டாரங்களும் சஞ்சாரம் சென்று அடியார்களுக்கு அருள் பிரசாதம் வழங்கிவந்தனர். அதன்மூலம் கோயில் தொடர்பு ஏற்பட்டது. இன்று அம்முறை நாட்டில் பெரும்பாலும் மறைந்துவிட்டது.

கோயிலுக்கு வரும் காணியாளர்கள் திருப்பணியிலும் பங்குபெறுகின்றனா. பெரும் பொருட்கொடையளித்து எண்ணற்ற தானதர்மங்கள் செய்து அதனால் அடையும் புண்ணியத்தைவிடத் திருக்கோயில் திருப்பணிகட்குச் சிறு கொடை அளித்தாலும் அதனால்

பெறும் புண்ணியம் மிகவும் அதிகமாகும்—சிறந்ததாகும். அதுவும் புதியதாக ஒரு கோயில் கட்டுவதைக் காட்டிலும் பழைய கோயில்களைத் திருப்பணி செய்வது சாலச் சிறந்ததாகும். பழைய கோயில்களைக்,

*'கல்லினால் அமைத்த பேர்கள்*
*கயிலைவிட்டு அகலார் தாமே'*

என்பது பழம்பாடலாகும்.

காஞ்சிப்புராணம், சிவபுண்ணியப் படலப் பாடலொன்று இதனை நன்கு விளக்குகிறது.

*முரிந்து வீழ்ந்தன வெடித்தன உடைந்தன முதிய*
*நெரிந்த வாகிய கோபுர நெடுமதில் பிறவும்*
*தெரிந்து முன்னையில் சீர்பெறப் புதுக்குவோர் பண்டு*
*புரிந்து ளோர்பெறும் புண்ணியம் நான்மடங்கு உறுவர்*

என்பது அப்பாடலாகும்.

தென்பாண்டி நாட்டுத் தென்காசி விசுவநாதர் திருக்கோயிலைக் கட்டிய அரிகேசரி பராக்கிரம பாண்டியன், தான் அமைத்த ஆலயம் தெய்வச்செயலால் அமைந்தது என்றும், மீண்டும் அக்கோயிலைத் திருப்பணி செய்து விரிவு செய்பவர்களின் திருவடிகளிலும், அக்கோயிலைப் பராமரித்துப் பாதுகாப்பவர்களின் திருவடிகளிலும் விழுந்து வணங்குவதாகவும் பாடிய பாடல் நம் உள்ளத்தை உருக்கும் தன்மை வாய்ந்ததாகும்.

*சேலே றியவயல் தென்காசி ஆலயம்*
*தெய்வச்செய*
*லாலே சமைந்ததிங்கு என்செயல் அல்ல*
*அதனைஇன்னும்*
*மேலே விரிவுசெய் தேபுரப் பார்அடி*
*வீழ்ந்துஅவர்தம்*
*பாலேவல் செய்து பணிவன் பராக்கிரம*
*பாண்டியனே*

என்பது பராக்கிரம பாண்டியன் பாடலாகும். கொங்குக் காணியாளர்கள் தம் குலதெய்வக் கோயில்களை நன்கு பராமரித்துப் பாதுகாத்து வருகின்றனர்.

# 7. கல்வெட்டுக்கள்

கத்தாங்கண்ணி ஆயிஅம்மன் திருக்கோயிலில் ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. அவைகளின் மூலம் அக்கோயிலின் முழுமையான வரலாற்றை அறிய முடிகிறது. யார் யார் எந்தெந்தத் திருப்பணிகளை எப்பொழுது செய்தார்கள் என்பதை ஆயிஅம்மன் கோயில் காணியாளர்களான வெண்டுவன் குலத்தார் ஆவணப்படுத்திக் கல்வெட்டுக்களாகவும் பொறித்து வைத்துள்ளனர். இது மிகவும் அரிய போற்றிப் புகழத்தக்க செயலாகும்.

கொங்குநாட்டின் பல கோயில் திருப்பணிகள் யார் செய்து முடித்தார்கள், எப்பொழுது செய்யப்பட்டன என்பதை அறியமுடியாமல் உள்ளது. கத்தாங்கண்ணி ஆயிஅம்மன் கோயிலில் திருப்பணிக் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டிருப்பது மிகவும் சிறப்பானதாகும். 1888, 1898, 1936, 1937 ஆகிய ஆண்டுகளில் திருப்பணிகள் நடைபெற்றுள்ளன.

**பாப்பம்பாளையம் அப்பாச்சிக் கவுண்டர் திருப்பணி**

பாப்பம்பாளையத்தில் செல்லப்ப கவுண்டர் என்னும் நிலக்கிழார் ஒருவர் இருந்தார். அவருக்கு முத்தைய கவுண்டர் என்ற ஒரு மகன் இருந்தார். முத்தைய கவுண்டருக்குக் குழந்தையில்லை. அவர் அப்பாச்சிக் கவுண்டர் என்பவரைச் சுவீகார மகனாக ஏற்றுக் கொண்டார். அப்பாச்சிக் கவுண்டர் கிராம மணியகாரராகவும் விளங்கினார். அவர் கத்தாங்கண்ணி ஆயிஅம்மன் கோயிலுக்குச் செய்த திருப்பணிகளை மூன்று கல்வெட்டுக்கள் விளக்குகின்றன.

அ) 1888 ஆம் ஆண்டு செப்டம்பர்–அக்டோபர் மாதங்களில் (கலியுகம் 4989 புரட்டாசி) ஆயிஅம்மன் கோயிலில் கருவறையையும், அர்த்தமண்டபத்தையும் கட்டி வைத்தார்.

ஆ) 1898 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 23 ஆம் தேதியில் (கலியுகம் 4999 சாலிவாகனம் 1820 ஆடி மாதம் 9ஆம் தேதி) ஆயி அம்மன் கோயிலில் காலைச் சந்தி பூசைக்காக ஆயிகோயில் தோட்டத்தின் வடபுறம் காலை க.ச. நெ. 35 பி சர்வே எண்ணுள்ள நிலம் ஒரு ஏக்கரை மானியமாக (கால் வள்ளம்) விட்டார். அந்நிலத்தின் வருவாயிலிருந்து ஆயிஅம்மன் கோயிலில் காலைப் பூசை நடைபெற ஏற்பாடு செய்தார்.

இ) 1898 ஆம் ஆண்டு ஜூன்–ஜூலை மாதங்கள் (கலியுகம் 4999, மன்மத ஆனி) ஆயிஅம்மன் கோயில் மகாமண்டபம், சிங்கக் கொறடு (சிம்மவாகனம்), ரிஷபக் கொறடு (காளை வாகனம்), தீபகம்பம் (விளக்குத் தூண்), குறிஞ்சி (முன்மண்டபம்), பொங்குமடம் (மடைப்பள்ளி), செங்கல்ப்பூதம் ஆகியவைகளைக் கட்டி வைத்தார்.

இப்பணிகட்காகக் கத்தாங்கண்ணிக் காணியாளர்களில் ஒருவராகிய செவந்தி குலத்தார் (சேலம் மாவட்டம், இருப்புலிக் கிராமத்தைச் சேர்ந்தவர்கள்) கொடையாக அளித்த ரூபாயும் சேர்ந்திருக்கிறது. இவ்விபரத்தை அப்பாச்சிக் கவுண்டர் தம் கல்வெட்டில் நன்றியுடன் குறித்திருப்பது சிறப்புக்கு உரியது.

முதல் கல்வெட்டுச் செய்தியைச் சதாசிவ முதலியார் என்பவரும், மூன்றாவது கல்வெட்டுச் செய்தியை உபாத்தியாயர் முத்து என்பவரும் எழுதிய விவரமும் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

**2. தேவனூர்க் கிராமம் ஆண்டியூர் கிருஷ்ணசாமிக் கவுண்டர் திருப்பணி**

1936 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11 ஆம் தேதி (கலியுகம் 5038 தாது வருடம் ஆவணி 27) அன்று கோவை மாவட்டம் உடுமலைப்பேட்டை வட்டம் தேவனூர் கிராமத்தைச் சேர்ந்த ஆண்டியூரில் இருந்த வெண்டுவ குலம் மலையாண்டிக் கவுண்டர் மகன் கிருஷ்ணசாமிக் கவுண்டர் என்பவர் நான்குபுறம் திருமதில்களையும், தீர்த்தக் கிணற்றையும் அமைத்தார்.

முத்து என்பவர் இந்தச் செய்தியை எழுதியுள்ளார். திருமதில், கிணறு பணிகளைச் செய்தவர் சின்னாபோயன் என்பவர்.

**3. தேவனூர்க் கிராமம் புதூர்க் காணியாளர்கள் திருப்பணி**

1.2.1937 ஆம் நாள் கோவை மாவட்டம் உடுமலைப்பேட்டை வட்டம் தேவனூர்க் கிராமத்தைச் சேர்ந்த புதூரில் இருக்கும் கத்தாங்கண்ணி வெண்டுவகுலத்தார் ஏழுபேர் சேர்ந்து கத்தாங்கண்ணி ஆயிஅம்மன் கோயிலில் சாவடி என்னும் மடம் கட்டி வைத்துள்ளனர். கீழ்க்கண்டவர்கள் அப் பணிக்குப் பொருள் உதவி செய்துள்ளனர்.

| | | |
|---|---|---|
| அ) | மலையாண்டிக் கவுண்டர் மகன் கந்தசாமிக் கவுண்டர் | ரூபாய் 200 |
| ஆ) | இராமசாமிக கவுண்டர் மகன் திருமூர்த்திக் கவுண்டர் | ரூபாய் 100 |
| இ) | இராமசாமிக் கவுண்டர் மகன் திருமலைசாமிக் கவுண்டர் | ரூபாய் 100 |
| ஈ) | நாச்சிமுத்து கவுண்டர் | ரூபாய் 100 |
| உ) | மாரப்ப கவுண்டர் மகன் இராமசாமிக் கவுண்டர் | ரூபாய் 30 |
| ஊ) | மலையாக்கவுண்டர் மகன் அவணாண்டிக் கவுண்டர் | ரூபாய் 15 |

எ) செம்மாண்டா கவுண்டர் மகன் பழனிக்கவுண்டர் ரூபாய் 5

மொத்தம் ரூபாய் 650

உள்ளூர் முதலியார், உபாத்தியாயர், போயன், செவந்தி குலத்தார் ஆகியோர் பெயர்களைக் கல்வெட்டில் பொறித்திருப்பதும், பங்காளிகள் சுமார் 60 ஆண்டுகட்கு முன்பு கூட்டாகத் திருப்பணி செய்ததும். இச்செய்திகளை ஆங்காங்கு அந்த இடங்களிலேயே கல்வெட்டாகப் பொறித்து வைத்திருப்பதும் சிறப்புமிக்க செயலாகும்.

## கல்வெட்டுக்கள்-மூலம்

### 1. கோயிலின் கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபங்களின் கீழ்புறம் சுவரின் வெளிப்புறம் உள்ள கல்வெட்டு

கலியுக சகாப்தம் 4989 சருவதாரி வருஷம் புரட்டாசி மாசத்தில் பல தர்மத்தால் பாப்பம்பாளையம் காணியாழ வெண்டுவகுல முத்தைய கவுண்டருக்கு சுவீகார புத்திரன் மணியம் அப்பாச்சிக் கவுண்டர் யிந்த யிரண்டு மண்டபம் அம்மனுக்கு செய்து வைத்தது. கவில் எழுதினது சதாசிவ முதலியார்.

### 2. முன் குறிஞ்சிக் கல்வெட்டு

சகாப்தம் சாலி 1820 கலியுக சகாப்தம் 4999 நிகழும் மன்மத வருஷம் ஆடி மாதத்தில் 9 தேதியில் கோயமுத்தூர் ஜில்லா ஈரோடு தாலூக்கா சற்க்கார் கத்தாங்காணிக் கிராமத்திலிருக்கும் ஆயியம்மன் கோயில் காலைசந்தி பூசைக்காக கிராமம் பாப்பம்பாளையத்திலிருக்கும் வெண்டுவகுல கோத்திரம் காணியாழ செல்லப்ப கவுண்டன் பேறனும் முத்தைய கவுண்டன் மகனுமாகிய மணியம் அப்பாச்சிக் கவுண்டனால் படித்தறமாக வய்க்கப்பட்ட சொத்தின் விபரம் கிராமம் ஆயிகோயில் தோட்டத்தில் வடபுறம் காலை கா.ச.நெ.35 பி. விஸ்தீரணம் கால் வழ்ழத்துக்கு யேக்கர் 1.

### 3. பின் குறிஞ்சிக் கல்வெட்டு

கலியுகாதி சகாற்புதம் 4999ல் செல்லாநின்ற மன்மத வருஷம் ஆனி மாதத்தில் குறிஞ்சியில் சிலாசாசனம் எழுதிய விபரம மகாமண்டபம் சிங்க கொறடு ரிசபக் கொறடு தீபகம்பம் குருஞ்சி பொங்குமடம் செங்கல்ப் பூதம் 4 இதுக்கு பல தர்மக்காரர் முன்னிலையில் இந்த யெல்லைகள் நடத்தப்பட்டது. இதில் சேலம் ஜில்லா இருப்புலி கிராமம் வகையிராவிலே யிருக்கும் ஆதீனக்காரராகிய செவந்தி குலத்தாருடைய ரூபாயும் சேர்ந்திருக்கிறது. ஆயி அம்மன் உபயம். வெண்டுவகுல

கோத்திரம் காணியாள ஆதீனக்காரராகிய முத்தைய கவுண்டன் மகன் மணியம் அப்பாச்சிக் கவுண்டன். இது எழுதினது உபாத்தியாயர் முத்து.

### 4. நான்கு மதில்சுவர் தீர்த்தக் கிணற்றுக் கல்வெட்டு

சிவமயம் கலி 5038 தாது வருஷம் ஆவணி 27 உடுமலைப்பேட்டை தாலூக்கா தேவனூர் கிறாமம் ஆண்டியூரிலிருக்கும் வெண்டுவகுலம் மலையாண்டிக்கவுண்டர் குமாரர் கிருஷ்ணசாமிகவுண்டர் இந்த திருமதில் நாற்சுவரும் தீர்த்தகிணறும் செய்து வைத்தது, ஆயி அம்மனுக்கு உபயம் எ.ழு.பா. உ. பாத ல. முத்து. 1936 சின்னா போயன்.

### 5. கோயில் சாவடி (மடம்) கல்வெட்டு

சிவமயம் ஸ்ரீமது கலி 5038ல் தமிழ் தாது வருஷம் தை மாதம் 19 தேதி உடுமலைப்பேட்டைத் தாலுக்கா தேவனூர் கிராமம் புதூரிலிருக்கும் மலையாண்டிக் கவுண்டர் மகன் கந்தசாமிக்கவுண்டர் ரூ. 200, ராமசாமிக்கவுண்டர் மகன் திருமூர்த்திக் கவுண்டர் ரூ. 100, ராமசாமிகவுண்டர் மகன் திருமலைசாமிக் கவுண்டர் ரூ. 100, நாச்சிமுத்துக்கவுண்டர் ரூ. 100, ஆயிக் கவுண்டர் ரூ. 100, மாரப்பகவுண்டர் மகன் ராமசாமிக்கவுண்டர் ரூ. 30, மலையாக்கவுண்டர் மகன் அவணாண்டிக்கவுண்டர் ரூ. 15, செம்மாண்டாகவுண்டர் மகன் பழனிக்கவுண்டர் ரூ. 5, இவர்கள் சேர்ந்து மடம் கட்டி வைத்தது ஆயி அம்மனுக்கு உபயம். வருஷம் 1. 2. 1937. வெண்டுவகுலம்.

# 8. கத்தாங்கண்ணிக் கோயில்கள்

கத்தாங்கண்ணி கிராமத்தில் கத்தாங்கண்ணி, பாப்பம்பாளையம், வெங்கலப்பாளையம், அக்கிரகாரக் கத்தாங்கண்ணி ஆகிய பகுதிகளில் பல கோயில்கள் உள்ளன. அவை அனைத்திலும் சிறப்பாகப் பூசைகள் நடந்து வருகின்றன. காணியாளர்கள் அவைகளில் வழிபட்டு வருகின்றனர்.

சௌந்தரவல்லி சமேத நன்மணீசுவரர்
சொக்கநாதப் பெருமாள்
செவந்தீசுவரர்
செவப்பெருமாள்
மாரியம்மன்
பெரிய மாரியம்மன்
கோட்டை மாரியம்மன்
அழகு நாச்சியம்மன்
செல்லக்குமாரசாமி
குப்பியணசாமி
மாகாளியம்மன்
கன்னிமார்
கருப்பராயன்
பாளிக்காட்டுக் கருப்பராயன்
கருமண்டராயன்
புதுநாட்டராயன்

ஆகிய கோயில்கள் உள்ளன.

### பட்டயத்தில் கோயில்கள்

கத்தாங்கண்ணிப் பட்டயம், காடையூர்ப் பட்டயம் ஆகிய வரலாற்று ஆவணங்களில் கத்தாங்கண்ணிக் கோயில்கள் சில குறிப்பிடப்படுகின்றன

> ‘அத்தப்பகவுண்டரும் மக்களும் வகையறாக்களும் கற்றாங்காணியில் காணிபூமியும் மேன்மைத்துடனேயும் ஆலயத் திருப்பணியும் நன்மணிஷ்பரன் மேலூரம்மன் சொக்கபெருமாள் அழகநாச்சியம்மன் யிந்தக் தேவாதிகளையெல்லாம் அபிஷேக நிமார்த்தனை செய்து விபூதி பச்சடம் பெற்றுக் கொண்டு

நாங்கழனவோர்களும் சுக சேமமாய் நடந்து வாழ்ந்து வருகிறோம்' என்பது கத்தாங்கண்ணிப் பட்டயப் பகுதி. இங்கு குறிப்பிடப்பெறும் அத்தப்பகவுண்டர் கொங்கு வேளாளரில் கண்ணகுலம் சார்ந்தவர்கள். கண்ணப்ப மன்றாடியார்கள் வழிவந்தவர்கள். கத்தாங்கண்ணி அத்தப்ப கவுண்டருக்கு நல்லணகவுண்டர், அமராவதிக்கவுண்டர் என்ற இரு தம்பியர் உண்டு. நல்லணகவுண்டர் கன்னிவாடியிலும், அமராவதிக்கவுண்டர் கூடலூரிலும் இருந்தார்கள்.

கத்தாங்கண்ணி கண்ணகுல அத்தப்ப கவுண்டருக்கு தண்டிய வேலப்பகவுண்டர், உலகுடைய ராசாக்கவுண்டர், திருச்செங்கோடகவுண்டர் ஆகிய மூன்று மக்கள் உண்டு. அனைவரும் கத்தாங்கண்ணியில் வாழ்ந்து மேற்கண்ட கோயில்களில் வழிபட்டு வந்துள்ளனர்.

அப்பட்டயத்தில் மற்றுமொரு பகுதியில்,

'சாலியவாகன சகார்த்தம் 1295க்கு கலியுக சகார்த்தம் 4387க்கு மேல் செல்லாநின்ற யேர்விழம்பி வருசம் வைகாசி மாதம் 13ந் தேதி சுக்குர வாரமும் உத்தர நச்சேத்திரமும் சத்தமி திதியும் அமுர்த கேளிகையும் தயிதவாகரணமும் கூடிய சுபதினத்தில் கன்ன குலத்து செங்கோட்டு வேலப்ப கவுண்டனுக்கு சிவந்தி குலத்து தீத்தாக்கவுண்டன் தன் மகள் வெள்ளைப்பெண்ணைக் கலியாணஞ்செய்து கொள்கிரத்துக்காக யிந்த யிக்கரைக் கற்றாங்காணியில் யென் காணி மெறாசு நன்மணீஷ்பரன் மேலூரம்மன் சொக்கபெருமாள் அழகநாச்சியம்மன் யிந்தத் தேவாதிகளுக்கு முப்பாடு விபூதி பச்சடம் யெனக்குச் செல்லும்படி மெறாசு சருவ சுதந்திரத்தையும் நீங்களே பெற்றுக்கொண்டு கலியானஞ் செய்து கொண்டு சுகசேமமாயிருக்க வேண்டியது. யிந்தப்டிக்கி னானாகச் சம்மதிச்சு யிந்த தலத்தில் யிந்தச் சபையோர்கள் முன்பாக யெளுதிக் குடுத்த தாம்புர சாசீனப் பட்டயம்'.

என்று கூறப்படுகிறது.

இந்தச் சபையில் கத்தாங்கண்ணி வெண்டுவகுலத்தில் பச்சைலிங்ககவுண்டர் என்பவர் கலந்து கொண்டு கையெழுத்துப் போட்டுள்ளார். இப்பட்டயத்தில் குறிக்கப்பட்டுள்ள செவந்தி குலத்துத் தீத்தாக்கவுண்டர் முதலில் தன் பெண்ணைக கத்தாங்கண்ணி வெண்டுவகுல முத்தையகவுண்டரையே திருமணம் செய்து கொள்ளுமாறு கேட்கிறார். வெண்டுவகுல முத்தையகவுண்டர் மறுத்துவிட்டார். இதன்மூலம் செவந்திகுலம், கண்ணகுலம் ஆகிய குலத்தார்க்கு முன்பாகவே வெண்டுவகுலத்தார் கத்தாங்கண்ணியில் காணியுரிமை பெற்றிருந்தார்கள் என்பது பெறப்படுகிறது.

பட்டயத்தின் இறுதிப் பகுதியில்,

'நன்மணீஷ்பரன் லச்சிக்கவும், மேலூரம்மன் லச்சிக்கவும், சொக்கபெருமாள் லச்சிக்கவும், அழகநாச்சியம்மன், மாரியம்மன் லச்சிக்கவும்'

என எழுதப்பட்டுள்ளது. லச்சிக்கவும் என்பது இரட்சிக்கவும் என்பதன் பேச்சு வழக்கு மொழியாகும்.

**மேலூரம்மன் கோயில்**

கத்தாங்கண்ணிப் பட்டயத்தில் மேற்கண்ட மூன்று இடங்களிலும் சிவன் பெருமாள் கோயில்கட்கு இடையில் மேலூரம்மன் கோயில் என்பது குறிசக்கப்படுகிறது. எனவே இக்கோயில் மிகவும் முக்கியமான கோயிலாக இருந்திருக்க வேண்டும். அநேகமாகக் கத்தாங்கண்ணியின் மேற்குப் பக்கமாக இக்கோயில் இருந்திருக்கலாம். இன்று கத்தாங்கண்ணிக் காணியாளர்கள் கூறும் கோயில்களில் மேலூரம்மன் கோயில் இடம்பெறவில்லை. காடையூர்ப் பட்டயத்தில் இக்கோயில் 'விடுகாளி மேலூரம்மன்' கோயில் என்று குறிப்பிடப்படுகிறது.

**நன்மணீசுவரன் கோயில்**

நொய்யல் ஆற்றுக்குத் தென்கரையில் தொல்பழங்காலச் சின்னங்கள் உடைய மேட்டில் கிழக்கு நோக்கி நன்மணீசுவரன் கோயில் உள்ளது. சுற்றுச்சுவரும், தென்புறம் இருந்த சௌந்தரவல்லி அம்மன் கோயிலும், பின்புறம் இருந்த முருகன் கோயிலும் முழுவதும் அழிந்துவிட்டது. கோயில் அருகில் இரண்டு சிறு சுனைகள் உள்ளன. சிவன் கோயிலின் முன்புறம் சுயம்பு லிங்கம் ஒன்று வெளிப்பட்டுள்ளது. அதற்கும் பூசை நடைபெற்று வருகிறது. அம்மன் திருவுருவம் சிவன் கோயிலுக்குள் எடுத்து வைக்கப்பட்டுள்ளது. நன்மணீசுவரன் இல்லாமல் செவந்தீசுவரர் என்ற பெயருடைய லிங்கமும் உள்ளது என்று கூறுகின்றனர்.

இக்கோயிலில் கொங்குச் சோழ மன்னர்கள் இராசகேசரி குலோத்துங்க சோழன், உத்தமசோழ வீரநாராயணன், போசளமன்னன் வீரவல்லாளதேவன், உம்மத்தூர்த் தலைவன் வீரநஞ்சராயன், கோனேரின்மை கொண்டான் கல்வெட்டுக்கள் உள்ளன.

வீரராசேந்திர வளநாட்டு நரையனூர் நாட்டு உடையபிராட்டிச் சதுர்வேத மங்கலத்துப்' பிராமணன் விசுவாமித்திரன் திருநாராயணபுரத்துப்பிள்ளை ஜகந்நாத பிரமாதிராயன் என்பான் நந்தாதீபம் வைத்து சிவ பிராமணரிடம் கொடை அளித்துள்ளான்.

வீரபாண்டியப் பெருமான் என்பவன் திருவமுதுக்கும் ஐந்து நந்தாதீபத்துக்கும் மூலப்பொருளாகப் பொன்னைக் கொடையாக அளித்துள்ளான். நிலமும் கொடையாக அளிக்கப்பட்டுள்ளது. பாரத்வாஜி அரியபொருள் விண்டுவரப்பெருமாள் ஆன விக்கிரம பாண்டிய பிரமாதிராயரும் அவர் மகன் சிங்கப்பெருமாள் அல்லாளநாதனும் திருவமுதுக்குப் பொன் கொடையாக அளித்துள்ளனர்.

திரிபுவனத்துராஜாக்கள் தம்பிரானார் பராக்கிரம பாண்டியதேவர் மகன் நயினார் ராகுத்தப்பெருமாள் காலத்தில் பல வரிகள் வருமானமாகக் கோயிலுக்கு அளிக்கப்பட்டன. விக்கிரம பாண்டியப் பிரமாதிராயர் என்பவர் சாட்சிக் கையெப்பமிட்டுள்ளார். பாண்டவருள் ஒருவனாகிய நகுலன் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் என்பர்.

### சொக்கநாதப் பெருமாள்

சிவன் கோயில் அருகே தென்கிழக்குப் பக்கம் கிழக்கு நோக்கி அமைந்துள்ள கோயில். பெருமாள் சொக்கப்பெருமாள் என்றும் அழைக்கப்படுகிறார். இப்பெருமாளுக்குக் குலோத்துங்க சோழ விண்ணகர் ஆழ்வார் என்று பெயர்.

பிரமபல்லவராயர், ஜயங்கொண்ட சோழ மூவேந்த வேளான், வீரசோழ மூவேந்த வேளான் ஆகியோர் பெயர்கள் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளன. மற்றொரு கல்வெட்டில் குலோத்துங்க சோழ விண்ணகர் எம்பெருமாள் என்றும் பெருமாள் குறிக்கப் பெறுகிறார்.

கோனேரிராயன் கல்வெட்டும், கொங்குச் சோழமன்னன் குலோத்துங்க சோழன் கல்வெட்டும் ஆக இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன. செவப்பெருமாள் கோயில் என்ற பெருமாள் கோயில் ஒன்றும் குறிக்கப்பட்டுள்ளது.

### மாரியம்மன் கோயில்கள்

மாரியம்மனை மழைத்தெய்வம் என்றும், கண்ணகி வழிபாட்டின் எச்சம் என்றும் கூறுவர். கண்ணகி தேவிக்கு ஏற்பட்ட துயரால் நாட்டில் மழைபெயயவில்லை என்றும், கண்ணகிக்கு விழாவோடு சாந்தி செய்ய மழை மாறாமல் பெய்தது என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. கண்ணகியைக் 'கொங்கச்செல்வி' என்றும் சிலப்பதிகாரம் கூறும்.

கத்தாங்கண்ணியில் 18 சேய்க் கிராமங்களுக்கும் பொதுவான பெரிய மாரியம்மன் கோயில் உள்ளது. வெங்கலப்பாளையத்தில் கோட்டை மாரியம்மன் கோயிலும், பாப்பம்பாளையத்தில் மாரியம்மன் கோயிலும் உள்ளன.

### அழகுநாச்சியம்மன் கோயில்

கொங்கு வேளாண் பெருமக்கள் கொங்கு நாட்டுக்குக் குடியேறிய நிகழ்ச்சிகளை விரித்துக் கூறுவது 'கொங்கு காணியான பட்டயம்' என்பதாகும். கொங்கு நாட்டில் அவர்கள் எடுத்த தேவாலய வரலாறு அப்பட்டயத்தில் விரித்துக் கூறப்படுகிறது. கொங்கு மக்களின் முதல் தொன்மையான கோயில்களாக பெரிய நாச்சியம்மன், அழகுநாச்சியம்மன், பாடகநாச்சியம்மன், பச்சை நாச்சியம்மன் ஆகிய தெய்வக் கோயில்கள் குறிக்கப்படுகின்றன.

> 'இந்த தெய்வங்களுடைய கிருபையாலே தன கனக வஸ்து வாகன சந்தான புத்திர பாக்கியங்கள் பெற்று விளாந்தேரி நீடூழி வாழ்வார்கள்'

என்று கொங்கு வேளாண் பெருமக்கள் கூறப்பட்டுள்ளனர்.

நாச்சி என்ற சொல்லுக்குத் தலைவி, அரசி, தேவி, பெண்தெய்வம் ஆகிய பல பொருள்கள் உண்டு. பல இடங்களில் நாச்சியம்மன், நாச்சிமார், நாச்சியாயி என்ற பெயரில் கோயில்கள் எடுத்துள்ளனர். குறுப்புநாட்டுக் கொடுமணலிலும், வாழவந்தி நாட்டுத் தோழூரிலும் காவல் தெய்வமாக நாச்சியார் அம்மன் உள்ளனர். அத்திப்பாளையம், இராமாபாளையம், எழுநூற்றிமங்கலம் போன்ற ஊர்களில் பொன்நாச்சியம்மன் கோயில்கள் உள்ளன.

கத்தாங்கண்ணியில் அழகுநாச்சியம்மன் கோயில் ஊர்ப் பொதுக்கோயிலாகச் சிறப்புடன் திகழுகிறது.

### செல்லக்குமாரர் கோயில்

முத்தூர் மணியகுலச் செல்லப்பகவுண்டர் மகனாகத் தோன்றி பலகலை கற்றுத் தென்சேரி சென்று மக்கள் நோய்நீக்கிக் கால்நடைச் செல்வங்களுடன் பூந்துறை வந்து அருகில் உள்ள சேமூரில் தங்கித் தெய்வமானவர் செல்லக்குமாரர். செல்லக்குமாரரை முருகன் அவதாரமாகவே கருதுவர். முன்யுகங்களில் திருஞானசம்பந்தராகவும், உக்கிர குமாரபாண்டியனாகவும், சுவாமிமலை சுவாமிநாதனுமாய்த் தோன்றிக் கலியுகத்தில்' செல்லக்குமாரராக முருகன் தோன்றினார் என்பர். சின்னமுத்தூரில் தெய்வீக நிலையடைந்தார் என்றும் பெற்றோர் மணியகுலப் பரஞ்சோதியார்–பாவை என்றும் கூறுவர். பின்னர் பல ஊர்களில் செல்லக்குமாரர் கோயில்கள் எடுக்கப்பட்டன. கத்தாங்கண்ணியில் மணியகுலத்தாரே குலதெய்வமாகக் கொண்டு வழிபட்டு வருகின்றனர்.

செல்லக்குமாரர் கோயிலில் செல்லக்குமாரரின் படைத்தளபதி

வீரகுப்பியண்ணனுக்குத் தனிக்கோயில் உள்ளது. குமராயி, அத்தாயி, முத்தாயி, நல்லாயி, மாரியாத்தாள் ஆகிய செல்வக்குமாரர் வரலாற்றோடு தொடர்புடைய தெய்வங்களின் திருச்சன்னதிகளும் உள்ளன.

**கன்னிமார் கோயில்**

உலகில் இன்றியமையாத பொருள்களை ஏழாக வகுப்பது பண்டைய வழக்கம். இறைவனையே ஏழிசையாக வழிபட்டனர். 'ஏழிசையாய் இசைப்பயனாய்' இறைவன் உள்ளான் என்பர். உலகை ஏழாக வகுத்தனர். கடல், ஆறு, நாள், தலம் ஆகியவைகளை ஏழாக வகுத்தனர். சிறப்பான அன்னையர் வழிபாட்டையும் 'தாய்மார் எழுவர்' என்று வழிபட்டனர். இதனைச் சப்தமாதர், கன்னிமார் வழிபாடு என்று அழைத்தனர்.

பிங்கலந்தை நிகண்டு சப்த கன்னியரை பிராமணி, நாராயணி, மாகேஸ்வரி, கௌமாரி, வராகி, உருத்திராணி, இந்திராணி எனக் குறிக்கும். சூடாமணி நிகண்டு பிராமி, வயசுவாணி, மாகேசுவரி, கௌமாரி, வராகி, மாகாளி, மாகேந்திரி எனச் சிறிது வேறுபாட்டுடன் கூறும். அநேகமாக எல்லாக் குலதெய்வக் கோயில்களிலும் சப்தகன்னியர் சன்னதி இருப்பதைக் காணலாம்.

**கருப்பராயன் கோயில்**

கருப்பராயன், கருப்பண்ணசாமி காவல் தெய்வமாகும். காத்தற் கடவுளாகிய திருமாலின் அம்சமாகவே கருப்பராயன் விளங்குகிறார். பல கருப்பராயன் சிலைகளில் நாமக் குறியீட்டைக் காணலாம். எப்படியோ கருப்பராயன்–கருப்பணசாமி வழிபாட்டில் இடையில் பலியிடும் பழக்கம் புகுந்துவிட்டது. பாப்பம்பாளையத்தில் பாளிக்காட்டுக் கருப்பணசாமி கோயில் உள்ளது. அக்கோயில் வெண்டுவன் குலத்தாருக்கு உரியது.

கத்தாங்கண்ணியில் கருமண்டராயன் கோயில் உள்ளது. இதுவும் கருப்பராயன் போலக் காவல் தெய்வமேயாகும்.

**மாகாளியம்மன் கோயில்**

கொற்றவையாகிய காளியை–அன்னையை ஓம்காளி (ஓங்காளி), பத்ரகாளி, மதுரகாளி, கவையகாளி, கரியகாளி, பொன்காளி (பொங்காளி) என்று பல்வேறு பெயர்கள் இட்டு எழுந்தருளச் செய்து வழிபடுகின்றனர். அவற்றுள் மாகாளியம்மன் என்பதும் ஒன்றாகும்.

மாரியம்மன் கோயிலும், மாகாளியம்மன் கோயிலும் வெண்டுவன்

குலத்தாருக்கும் மணியகுலத்தாருக்கும் பொதுவாக உரியது.

**நாட்டராயன் கோயில்**

சேரநாட்டை ஆட்சிபுரிந்த மாந்தரஞ்சேரல் என்னும் மன்னன் தன்சார்பில் கொங்கு நாட்டில் ஆட்சிபுரிந்த வேளாண் பெருமக்களை வாழ்த்தி மாந்தபுரத்தில் நாட்டராயன் கோயிலை உருவாக்கினான். அம் மூலக்கோயிலிருந்து கொங்கின் பல பகுதிகளில் நாட்டராயன் கோயில்கள் அமைக்கப்பட்டன. கத்தாங்கண்ணியில் உள்ள நாட்டராயன் கோயிலுக்குப் புதுநாட்டராயன் கோயில் என்பது பெயர்.

'கோயில் விளங்கக் குடி விளங்கும்' என்பது பழமொழி. ஆகவே வேளாண் பெருமக்களாகிய காணியாளர்கள் கோயிலைப் போற்றிப் பாதுகாத்துப் புரப்பார்களாக. கோயில்கள் ஓருரின் இன்றியமையாச் சின்னங்களாகும். அதனால்தான் நம் முன்னோர்கள் 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று கூறினர்.

# 9. வெண்டுவன் குலம்

**பெயர்**

கொங்கு வேளாண் பெருமக்களில் வெண்டுவன் குலம் என்பது ஒரு முக்கியமான குலமாகும். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத வெண்டுவன் என்ற தலைவர் வழிவந்த மக்கள் வெண்டுவன் குலத்தார் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். அதாவது வெண்டுவன் குலத்திற்குக் குலமுதல்வர் வெண்டுவன் என்பார் ஆகலாம்.

வெண்டுவன் குலம்

வெண்டுவன் கூட்டம்

வெண்டுவன் கோத்திரம்

என்ற பெயர்களால் இக்குலம் குறிக்கப்படுகிறது. குலம், கூட்டம், கோத்திரம் இவை மூன்றும் ஒரே பொருள்தரும் சொற்களேயாகும்.

**பல கருத்துக்கள்**

அறிஞர் டி.எம். காளியப்பா அவர்கள் 'வெண்டுவன் கூட்டம்' என்ற பெயர் வெண்டுக்காய் என்ற சொல்லின் வழியாக ஏற்பட்ட பெயராகும். வெண்டுக்காய் என்பது வெண்டைக்காய். வெண்டுவ குலத்தினர் வெண்டைக்காயை உண்ணமாட்டார்கள். இக் குலத்தாரின் அடையாளப் பெயர் வெண்டைக் காயிலிருந்து தோன்றியதாகும் என்று கூறுகிறார்.

எழுத்தாளர் கு.சேதுராமன் அவர்கள் 'வெண்டைக்காயை விளைவிக்கும் திறமைசாலிகள் வெண்டுவன் குலத்தார். இவர்கள் வெண்டைக்காயை உண்ணமாட்டார்கள். பிறருக்காகவே விளைவிக்கப்படும் அவற்றைத் தாம் உண்ணக்கூடாது என்ற தத்துவமோ என்னமோ தெரியவில்லை. வெண்டையின் பேரால் குலம் துலங்குகிறது' என்று எழுதியுள்ளார்.

நாட்டுப்புறவியல் ஆய்வாளர் கிருட்டிணசாமி அவர்கள் வெண்டுவன் என்பதற்கு வெண்டைச்செடி என்று பொருள் கொள்ளுகிறார்.

**இலக்கியங்களில்**

குலப்பெயர்களைத் தொகுத்துக் கூறும் இலக்கியங்களிலும் நாட்டுப் பாடல்களிலும், சதக நூலிலும் வெண்டுவன் குலம் சிறப்புடன குறிக்கப்பட்டுள்ளது.

கொங்குநாட்டு மூதறிஞர் வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் தாம் பதிப்பித்த வாலசுந்தரக் கவிராயரின் கொங்குமண்டல சதகத்தின் பிற்சேர்க்கையாக வேளாளர் 96 கீர்த்திப் பாடல் என்ற நீண்ட பாடல் ஒன்றைச் சேர்த்துள்ளார்கள். அதில் குலப் பெயர்கள் தொகுத்துக் கூறப்படுவதுடன் கொங்கு வேளாளர்தம் பெருமையும் புகழும் பலபடப் பாராட்டிக் கூறப்பட்டுள்ளது. அதில் ஒரு பகுதி,

*காருலாம் இனிதான காடைகுலர் ஆந்தைகுலர்*
*கனிவுசாத் தந்தைகுலரும்*
*கற்புயர்செம் பூத்தகுலர் வண்ணக்கர் உண்ணக்கர்*
*கனத்தபூச் சந்தைகுலரும்*
*கனமான ஆந்தைகுலர் பட்டாலி நரபாலர்*
*கதிதனஞ் செயகுலரும்*
*கங்கா குலத்தரசர் வாகைகுலர் அரசகுலர்*
*கனமேவு முரசுகுலரும்*
*காசினி மதிக்கவரு வாங்கல் பெருங்குடி*
*வளஞ்சியர் ஒழுக்கர்குலமும்*
*கன்றுதவு வெண்டுவன் அந்துவ குலத்தவரும்*
*கனமாடை மணியன் ஈஞ்சன்*

என்பதாகும்.

பிரமயணப் புலவர் மகன் சின்னத்தம்பிப் புலவர் பாடிய 'ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி' என்னும் நூலைச் சங்கரண்டாம்பாளையம் வேணாடுடையார் ஆதீனப் புலவர் திருப்பூர் க. பழனிசாமிப் புலவர் பதிப்பித்துள்ளார். அந்நூலில் பொங்கலூர் நாட்டில் வாழும் வேளாண்குலப் பெருமக்கள் அனைவரும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளனர். அப்பாடல்,

*பொன்னர் ஓதாளர் கோத்திரர் குழாயர்*
*பொருந்து சாத்தந்தை செம்பர் செம்பூதர்*
*கண்ணர் மாடையும் பூசனும் வெண்டுவர்*
*காடை செங்கண்ணர் பொருளந்தை பயிரர்*
*எண்ணை ஆந்தை கோவேந்தர் பனங்காடை*
*இப்படிச் சிறந்தே ஓங்கி யிருக்கும்*
*இன்னம் நற்பல வேளிர்கள் வாழ்வுற்று*
*இருக்கும் பொங்கலூரர் நாடெங்கள் நாடே*

என்பதாகும்.

தென்கரைநாட்டு முதலிபாளையம் மகாவித்துவான் ப. நாச்சிமுத்துப் புலவர் வேளாளபுராணத்தின் சுருக்கமாக 'மரபாளர் உற்பத்திக் கும்மி' என்ற நூலைப் பாடியுள்ளார். அந்நூலில்

*பண்ணை பெரியன் பொருள்தந்தை செங்கண்ணன்*
*பயிரன் பூசன் ஓதாளருமே*
*கெண்ய குழாயன் சேரன் செம்பூதன்*
*பொன்னன் வெண்டுவன் பெருங்குடியான்*

என்பது ஒரு பாடலாகும்,

கொடுமணல் தம்பிராட்டிபாளையம் நா. நாச்சிமுத்துப் புலவர் தொகுப்பு ஏட்டுச் சுவடிகள் ஈரோடு கலைமகள் கல்விநிலைய அருங்காட்சியகத்தில் உள்ளன. அவற்றில் ஒரு பகுதி 'கொடுமணல் இலக்கியங்கள்' என்னும் பெயரில் தமிழக அரசால் 1981 இல் மதுரையில் நடைபெற்ற 5–ஆம் உலகத் தமிழ் மாநாட்டில் வெளியிடப் பட்டன. இந்நூலாசிரியர் அதன் பதிப்பாசிரியர் ஆவார். அந்நூலில் குலப் பாடல்கள் பகுதியில்,

*திங்களணி மணிமேடை பூச்சக்ர வாள்குடைத்*
*தென்திசை அலங்கரித்துச்*
*சேரனவர் பாண்டியன் சோழர்திசைச் காராளர்*
*செய்யநதி காவேரிமுன்*
*கொங்கில்வரு பண்ணன் ஓதாளன் பெரியகுலன்*
*பொருளந்தை கோவன்வேந்தன்*
*குழாயன்நீ லன்செங்கண் ணன்காடை விளிபுல்லன்*
*கூரப்பனை பூந்தைபுன்னை*
*மங்கைமணி சாத்தந்தை பூசகுலன் அந்துவன்*
*மளூவழகர் பரதர்விரதர்*
*மாடை குன்றலி ஆடை அடகர்*
*வாணர்பூச் சந்தை ஆந்தை*
*நங்குடிகள் வெண்டுவன் தனிஞ்சிசெம் பூதன்தூரை*
*நாரைநீ ருணிபெருங்குடி*
*ஆதிகீரை கண்ணந்தை வண்ணக்கர் கோட்டார்*
*நற்கொங்கு வளநாடரே*

என்ற பாடல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

கவிஞர் புதுமதியன் இயற்றிய நல்லதாய் மாலைப் பாடல்களில் கூடலூர் அருங்கரையம்மன் புகழ் கூறப்படுகிறது. அக்கோயில்

காணியாளர்களைத் தொகுத்துக் கூறும் பாடல்

*வெண்டுவர் பண்ணையர் பனையர் குலாதிபர்கள்*
*வேண்டிடும் குலதேவதை*
*வேண்டிடும் வரமெலாம் ஈேண்டிடத் தந்தருள்*
*விளைவுசெய் கிறதேவதை"*

என்பதாகும்.

மேலே குறிப்பிட்ட ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சியில் கொங்குநாட்டில் குடியேறிய கொங்கு வேளாண் பெருமக்களின் குலப்பெயர்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. அப்பாடலில்

*பொன்னர் ஓதாளர் பூசர் செம்பூதர்*
*அன்னதரு காரன் ஆவண் சாத்தந்தை*
*கோவர் குழாயர் கோவேந்தர் செம்பர்*
*மாவலர் பண்ணர் மாடை காடை*
*பூச்சந்தை ஆந்தை பொருளந்தை ஒழுக்கர்*
*வாச்ச கண்ணந்தை மணியன் தூரன்*
*செங்குண்ணி படுகுண்ணி சேகர் செவ்வாயர்*
*செங்கண்ணர் வண்ணக்கர் சேரன் சிலம்பன்*
*புத்தன் பொடியன் பூந்தன் வேந்தன்*
*முத்தன் காரி மூல குலத்தான்*
*கிளிஞ்சி நீலன் கணவாளன் அழகன்*
*விளியன் விலையன் வில்லி செல்லன்*
*ஆடை அழகன் ஆதி அந்துவன்*
*சேடன் பதரி சேரலன் மூரியன்*
*பெரிய குலத்தான் பெரழந்தை கடுந்துளி*
*வரிவிழி பவளன் மாதங்க கோத்திரன்*
*பனைபூந்தர் தோரக்கர் பாண்டியர் கணக்கர்*
*அணிலன் குண்டலி கூரை கீரை*
*நீலன் மேதி நேரியன் சூரியன்*
*சூல குலத்தான் சோதி தேவேநதிரன்*
*மீனவன் எண்ணை வெண்டுவன் ஈஞ்சன்*

எனற பகுதி காணப்படுகிறது.

குலத்தொகுப்புப் பாடல்கள் அனைத்திலும் வெண்டுவன் குலம் இடம்பெற்றுச் சிறககிறது. கொங்கு மண்டல சதகத்திலும் வெண்டுல குலமும் அதன் தலைவர் தீத்தான் செவவந்தியும் மிகவும்

புகழ்ப்படுகின்றனர். மேற்கண்ட பாடல்களில்

*'கன்றுதவு வெண்டுவன்'*

*'நங்குடிகள் வெண்டுவன்'*

என்ற தொடர்கள் காணப்படுவது சிறப்புக்குரியதாகும். பழங்காலத்தில் கன்றுக்குட்டிகளுக்கு இலவசமாகப் புல்லும் குழந்தைகட்கு இலவசமாகப் பாலும் கொடுப்பது வழக்கம். நிலத்தைப் பிறருக்கு அளிக்கும்போது இவைகளைத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்று எழுதித் தருவர். அதனைக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் 'கற்றுப் புல்போகா முற்றூட்டு' என்று குறிக்கும். அதுபோலக் கன்றுகளுக்கு வெண்டுவன் குலத்தார் சிறப்பாகப் புல் கொடுக்கும் பண்பினர் என்பதைக் 'கன்றுதவு வெண்டுவன்' என்ற தொடர் குறிக்கலாம், பாடல்கள் பாடிய புலவரை வெண்டுவன் குலத்தார் ஆதரித்துப் பல பரிசில்கள் கொடுத்திருக்கலாம். அதனால் அப்புலவர் உரிமையுடன் 'நங்குடிகள் வெண்டுவன்' என்று உரிமையுடன் அழைத்திருக்கலாம்.

# 10. காணி ஊர்கள்

'காணி' என்ற சொல்லுக்கு உரிமை என்பது பொருள். அச்சொல் 'காணியாட்சி' என்றும் வழங்கப்பெறும். காணி உரிமையுடையவர்கள் 'காணியாளர்' எனப்படுவர். ஒரூர்க் காணியாளர்கட்கு அந்த ஊர்ச்சபை, நாட்டுச் சபை இவற்றில் அங்கம் வகிக்கும் உரிமையுண்டு, அவ்வூர்க் கோயில்கள், பொது இடங்கள், வழிகள் இவற்றில் அனுபவ உரிமையும் காணியாளர்கட்கு உண்டு. பல சமூக மக்களும் காணியாளர்களாக இருப்பது உண்டு. கவுண்டர்கள் காணியாளக்கவுண்டர்கள் எனப்படுவர்.

ஓர் ஊருக்குப் பல குலத்தார்கள் காணியாளராக இருப்பதும் உண்டு. சிலர் சில ஊர்களில் காணியுரிமைகளை ஏதோ காரணத்தால் இழந்துள்ளனர். சிலர் சில ஊர்களில் திருமணம், விலைக்கு வாங்கல் ஆகியவற்றால் புதுக்காணி பெறுவதும் உண்டு.

வெண்டுவன் குலத்தார் மேற்கண்டவாறு முழு உரிமை படைத்த காணியூர்கள் பல. அவற்றுள் தொன்மையான காணியூர்களை ஒரு பாடல் தொகுத்துக் கூறுகிறது. அப்பாடலில்,

பழனி சூழ்ந்த வைய்யாவூர் நாடு, கொங்கூர், கோனூர், கூடலூர், மண்மங்கை, ஆரியூர், வீரசோழநாட்டுக் கற்றான்காணி, வல்லிபுரம், முகிலனூர், சிற்றோடை, தோக்கவாடி, நல்லூர், தாளக்கரை, காடாம்பாடி, கொப்புலிநத்தம், கொல்லங்கோயில் ஆகிய ஊர்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. இவைகள் மூலமாகக் கீழ்க்கரைப் பூந்துறைநாடு, மேல்கரைப் பூந்துறை நாடு, மேல்கரை அரையநாடு, குறுப்புநாடு, வைகாவூர் நாடு, மணலூர்நாடு, இடைப்பிச்ச நாடு, தென்கரைநாடு, பொங்கலூர் நாடு, அண்டநாடு, வாழவந்திநாடு, கிழங்குநாடு, காங்கயநாடு ஆகியவற்றில் வெண்டுவன் குலத்தார் பண்டைக்காலம் தொடங்கிக் காணிபெற்றுச் சிறப்புடன் வாழ்ந்த வரலாறு நன்கு தெரிகிறது.

மேற்கண்ட ஊர்களைத் தொகுத்துக் கூறும் வெண்டுவகுலக் காணிப்பாடலில் அவர்கள் புனிதமிகும் காணி பெற்றவர்கள் என்றும், அதனால் புகழ் பெற்றவர்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. வெண்டுவன் குல ராவுத்தன கவுண்டர் போசன், வெண்டுவகுல தீபன், வசீரன், புவிராசன், மன்மதன், நிருபர் (அரசர்) என்றெல்லாம் போற்றப்படுகிறார். தாந்தோணியப்பர் என்ற சிவன் அருள் பெற்றவர் என்றும் கூறப்படுகிறார். அவரை வாழ்த்தியே இப் பாடல் எழுதப்பட்டுள்ளது. அவர் வெண்டுவகுலத் தலைவர் போலும்.

*வையாவூர் நாடுகொங் கூர்கோனூர் கூடலூர்*
*மண்மங்கை ஆரியூரும்*
*வீரசோழ நாட்டினில் கற்றாங் காணியும்*
*வல்லிபுரம் முகிலனூரும்*
*மெய்யான சிற்றோடை வளர்தோக்க வாடியும்*
*மேன்மைபெறு நல்லூருடன்*
*விளங்குதா ளக்கரையும் மிக்ககா டாம்பாடி*
*வெற்றிகொப் புலிநத்தமும்*
*பொய்யாத வாய்மையுள கொலங்கோயில் இதுவெலாம்*
*புனிதமிகும் காணிபெற்றாய்*
*புகழ்பெற்ற வெண்டுவ குல தீப வசீரனே*
*போசனே புவிராசனே*
*மய்யார் விழிச்சியர்கள் மன்மதன் ராவுத்தன்*
*மைந்தன்என வந்தருபா*
*மாதேவர் தான்தோன்றி அப்பரருள் பெற்றுமே*
*மாநிலம் தனில்வாழ்கவே'*

என்பது வெண்டுவ குலத்தார் காணிப்பாடலாகும். இப்பாடலில் 'வீரசோழ நாட்டினில் கற்றாங்காணி' என்ற சிறப்பு அடைமொழியுடன் கத்தாங்கண்ணி கூறப்பட்டுள்ளது. ஆட்சிச் சிறப்பு இதனால் பெறப்படுகிறது.

ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சியில் 'கற்றை வெண்டுவன்' என்ற தொடர் பயின்று வருகிறது. கற்றாங்காணிக்குரியவர்கள் வெண்டுவ குலத்தினர் என்பது அதன் பொருளாகும். அந் நூலில் குறவனிடம் குறத்தி தனக்குப் பரிசளித்தவர்களைக் கூறும்போது

*உற்றஉள் கழுத்தினில் ஓங்கும்பொன் காறையும்*
*உயர்ந்த அட்டிகைநகை ஏதடி சிங்கி?*
*கற்றை வெண்டுவன் கண்ணன்கூரைநல்லையன்முத்து*
*கருப்பணன் இவர்தந்த வரிசைகாண் சிங்கா*

என்பது அப்பாடல் பகுதியாகும்.

தலைவர்கள் சிலரைத் தொகுத்துக் கூறும்போது,

*தென்பள்ளி அமுக்கயம் சேர்பொரு ளந்தையும்*
*ஊற்றுலூர் நல்லூர் உயர்பொரு ளந்தையும்*
*கற்றாங் காணிவாழ் கண்ணர் வெண்டுவரும்*

*கூறை கோத்திரரிவர் கூறும் அவ்வூர்களில்*

*தலைவர்கள் ஆவர்'*

என்று கூறப்படுகிறது. இவ்விரு இலக்கிய வரிகள் கத்தாங்கண்ணிக்கு வெண்டுவர், கண்ணர், கூறை குலத்தினர் காணியாளர்கள் என்று கூறுகின்றன.

தேவணாம்பாளையம் என்னும் ஊரில் உள்ள சிங்கவிண்ணன் என்ற மன்னன் கல்வெட்டில் 'கருநிழலி வெண்டுவன்' என்பார் குறிக்கப்படுகிறார்.

ஈரோடு மாவட்டம் பழமங்கலம் வணிகக்குழுக் கல்வெட்டில் கிழங்குநாட்டு நித்தவிநோதபுரம் என்ற ஊரில் காணியுரிமை பெற்று வாழ்ந்த அதிருக்குறையான் என்பவர் திசையாயிரத்து ஐநூற்றுவ நானாதேசி என்ற வணிகக் குழுவினருக்கு வணிகம் செய்ய 'அடைக்கலம்' என்ற பாதுகாப்பு நகரம் அமைத்த விபரம் கூறப்படுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திசை
2. யாயிரத் தைஞ்னூ
3. ற்றுவ நானாதேசிய
4. டைக்கலம் கிழங்க
5. நாட்டு நித்த விநோத
6. புரத்திருந்து வாழும் வெ
7. ள்ளாளன் வெண்டுவ்வ
8. னதிருக் குறையான்
9. எடுப்பிச்ச மாநகரம்

என்பது அக்கல்வெட்டாகும். நித்தவிநோதன் என்பது புகழ்பெற்ற சோழமன்னன் முதலாம் இராசராசன் (கி.பி.985–1014) பட்டப்பெயராகும். இராசராசன் பெயரால் அமைந்த ஊர்த் தலைவனாக வெண்டுவன் அதிருக்குறையான் இருப்பதால் அவர் சோழர்கால அரசு அதிகாரியாக இருந்திருக்கக்கூடும். இக்கல்வெட்டு ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது.

கத்தாங்கண்ணிப் பட்டயத்தில் அவ்வூர் வெண்டுவருள் முத்தையகவுண்டர், பச்சாக்கவுண்டர் ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர். கொடுமணல் பட்டயத்தில் கத்தாங்கண்ணி ரட்டிபாளையம் முத்துக்கவுண்டர், வெள்ளைக்கவுண்டர், சிலம்பகவுண்டர், சின்னையகவுண்டர், குட்டியணகவுண்டர், கயிலாசக் கவுண்டர் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். குறுப்புநாட்டுப் பட்டயத்தில் கத்தாங்கண்ணி வெண்டுவருள் நல்லண கவுண்டர், அமராவதிக்

கவுண்டர் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். பேரோடு கரிச்சிக்குமாரர் செப்பேட்டில் வெண்டுவன் குலத்தார் அவ்வூர் முதல் காணியாளராகக் கூறப்பட்டுள்ளனர்.

தென்னிலை வேட்டுவம் பட்டக்காரர் பகவதிக் கவுண்டர் வீட்டுச் செப்பேட்டில் மங்கலம் என்ற ஊர்க் காளியம்மன் கோயில் இராசமுப்பாடு கோயில் முப்பாடு போன்ற உரிமைகளை வேட்டுவக் கவுண்டர்களிடமிருந்து வெண்டுவன் குலத்தார் பெற்ற விபரம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அச்செப்பேட்டில் வெண்டுவன்குலக் காளியப்ப கவுண்டர், திருமலைக் கவுண்டர் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். காடையூர் பட்டயத்தில் கத்தாங்கண்ணி வெண்டுவகுலப் பச்சைலிங்கக் கவுண்டர் குறிக்கப்படுகிறார். பாசூர் குருக்கள் செப்பேட்டில் கொல்லங்கோயில் பேரோடு வெண்டுவன்குலக் கவுண்டர்கள் கொமறநல்லைய கவுண்டர், கொமற சின்னய கவுண்டர், முத்துக்கருப்பண கவுண்டர், முத்துநாச்சியாக் கவுண்டர், பெரிய செங்கோட கவுண்டர், சீரங்கராயக் கவுண்டர் ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர்.

மணலூர் நாட்டுக் கூடலூர் வெண்டுவன் குலத்தாரின் சிறப்புமிகு காணியூராகும். கூடலூர் கிராமம் பெரிய திருமங்கலத்தில் உள்ள அருங்கரையம்மன் ஆலயத்தை உருவாக்கியவர்கள் வெண்டுவன் குலத்தினர். பெரிய திருமங்கலத்தில் வெண்டுவன் குலத்தார் கிழக்கு வளவு, மேற்கு வளவு என இரண்டு பிரிவாகச் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். பெரிய திருமங்கலத்தில்,

> 'கிராமப் பெரியதனமும், கொல்லுத்தொழில், ஆண்டி தோண்டி பள்ளுப்பறை பதினெட்டுச் சாதியாரின் தொழிலும் வெண்டுவன் குலத்தாருக்கு உரியதாக இருந்தது'

என்று கவிஞர் புதுமதியன் (பு.சி.கந்தசாமி) கூறியுள்ளார். கன்னிவாடிக் கண்ணகுலப் பட்டயத்தில் மணலூர் நாட்டு வெண்டுவகுலம் காளியப்ப கவுண்டர் என்பவர் குறிக்கப்படுகிறார். அருகில் உள்ள பிள்ளையார்பாளையம், பெரியமதியாக்கூடலூர் ஆகிய ஊர்களுக்கும் வெண்டுவன் குலத்தார் காணியாளர்களாக உள்ளனர். கூடலூர்க் கிராமத்தின் தலைமைப் பொறுப்பும், உள்ளூர்க் கவுண்டர்கள் என்னும் சிறப்பும் கொண்டு வடமுகம் வெண்டுவர், தென்முகம் வெண்டுவர் என வாழ்கின்றனர். கோவில்பாளையம், கருநெல்லிவலசு என்னும் ஊர்களிலும் வெண்டுவ குலத்தார் காணியாளர்களாக உள்ளனர்.

கூடலூர்க் கிராமத்தில் காணியுரிமையை நிலைநாட்டியபின் வெண்டுவன் குலத்தார் தங்கள் செல்வாக்கைப் பெருக்கியதுடன் மணல்நாட்டுப பெரியதனம் செய்யும் பெருமையும் பெற்றுத்

திகழ்ந்தனர். தென்னிலை, கோடந்தூர், நடந்தை, சின்னதாராபுரம், ராஜபுரம், சூடாமணி, எலவனூர் ஆகிய ஏழு கிராமங்களிலும் தன் சொந்தக் கிராமமான கூடலூரிலும் தலைமை பெற்று வாழ்ந்தனர். இதனை

*மண்டலந் தன்னில் மணல்நாட்டில் – புகழ்*
*தண்டி விளங்கிடும் காராளர்*
*வெண்டுவர்*

என்ற அருங்கரையம்மன் – நல்லதாய் கும்மிப் பாடல் பகுதி உணர்த்தும்.

பெரியதிருமங்கலம் அருங்கரையம்மன் கோயிலில் நுழைவாயில் மேல்புறம் நடுத்தூணில்

> 'சாலிவாகன சகாத்தம் 1774 கலியுக சகாத்தம் 4953 வெண்டுக கோத்திரம் வடுகபட்டி முத்துவேலப்ப கவுண்டன் மகன் நல்லண கவுண்டன், பழனிமலைக் கவுண்டன் ரூ. 100'

என்ற கல்வெட்டுக் காணப்படுகிறது. இக்கல்வெட்டு 1852 ஆம் ஆண்டைச் சேர்ந்தது.

அறிஞர் டி.எம். காளியப்பா அவர்கள் தம் நூலில் மண்மங்கலம். வளையபட்டி, செல்லாண்டிபாளையம். அரவக்குறிச்சி, ஆரியூர், சின்னமுத்தாம்பாளையம், பருத்திக் காட்டுப்பாளையம், கூடலூர், பெரிய திருமங்கலம், காளிபாளையம், மண்ணுகட்டி பாளையம், கருநல்லிவலசு, மீனாட்சிவலசு, வடுகப்பட்டி, குருக்கள் காட்டுப்புதூர், தர்மகோடங்கிப்பட்டி, புள்ளாக்கவுண்டம்பாளையம், வல்லிபுரம், நாட்டார்மங்கலம், பழனி, காடாம்பாடி, கத்தாங்கண்ணி, கொங்கூர், கொல்லங்கோயில், ஊதியூர். முகிலனூர், தாயம்பாளையம், குருக்கத்தி, கொளாநல்லி போன்ற ஊர்களை வெண்டுவன் குலத்தார் காணியூர்கள் என்று குறிப்பிடுகின்றார்.

முதுபெரும்புலவர் வே.ரா.தெய்வசிகாமணிக் கவுண்டர், எழுத்தாளர் கு,சேதுராமன் ஆகியோர் தம் நூலுள் கூறும் வெண்டுவன் குலத்தார் காணியூர்கள் மேற்கண்ட ஊர்களுக்குள்ளேயே அடங்கியுள்ளன. அவர்கள் கூறியுள்ள ஊர்களைக் கார்மேகக் கவிஞரின் கொங்கு மண்டல சதகத்திலும், கொங்குச் சீமைக் காணியாளர்கள் என்ற நூலிலும் காணலாம்.

**பொங்கலூர் நாட்டில்**

குறுப்புநாட்டு ஊர்கள் என்று ஊர்த்தொகைப் பாடல்கள் கூறும். கத்தாங்கண்ணி, மண்ணறை, முகுந்தநல்லூர் (பெரியபாளையம்), அமுக்கயம், ஊத்துக்குழி ஆகிய ஊர்களையும்

பொங்கலூர் நாட்டுப்பாடல் தனக்குரித்தாகக் கூறுகிறது.

பொங்கலூர் – பொங்கலூர்க்காநாடு, பொங்கலூர்க் கரைநாடு, பொன்குலுக்கிநாடு, பொன்கல்லூர்நாடு, பொன்னாடு என்று பலவாறு அழைக்கப்படும். மேனாட்டு நிலவியல் வரலாற்று அறிஞர் பெரில் எனப்படும் பச்சைநிறக் கற்கள் கிடைக்கும் புன்னாடதேசம் என்று குறித்திருப்பது இந்நாட்டையே ஆகும்.

பொங்கலூர் நாட்டு ஊர்த்தொகைப் பாடலில் குறுப்பு நாட்டுக்குரிய ஊர்களாகிய மண்ணறை, பெரியபாளையம், அமுக்கயம், கத்தாங்கண்ணி, ஊத்துக்குழி ஆகிய ஊர்கள்

*மண்ணறை முகுந்தநல் லூர்அமுக்க யங்கற்றை*
*மாலூரற்றலூர்'*

என்று பொங்கலூர் நாட்டில் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

பொங்கலூர் நாட்டு ஊர்களின் சிவாலயங்களைக் குறிக்கும் மற்றொரு பாடலிலும் கத்தாங்கண்ணி பொங்கலூர் நாட்டு ஊராகக் குறிக்கப்படுகிறது.

*'லக்கம்பாடி நந்தீசர், பெற்றனபள்ளி*
*நஞ்சுண்டீசர், நமனாரி வன்னீசர்,*
*வளர் மண்ணறையில் விஸ்வேஸ்வரர்*
*முகுந்த நகர்தனில் சுக்ரீவர்*
*அமுக்கயம் செவந்தீசர், கற்றாங்கண்ணி*
*ஆதிதேவர் வளர் ஊற்றலூர்தனில்*
*அக்கினீசு பரமானந்தனார்*
*ஆதி பொங்கலூர் நாடெங்கள் நாடே'*

என்பது அப்பாடலாகும்.

# 11. வரலாற்று ஆவணங்களில் வெண்டுவ குலம்

கொங்கு நாட்டுச் சமுதாய வரலாற்றைக் கூறும் பல ஆவணங்கள் கிடைத்துள்ளன. அவை செப்பேட்டிலும், ஓலைச்சுவடிகளிலும், காகிதங்களிலும் எழுதப்பட்டுள்ளன. அவை கொங்குச் சமுதாயம் பற்றியும், அவர்களின் வரலாற்று நிகழ்ச்சிகள், பழக்கவழக்கங்கள், வழிபாடு, காணியுரிமை, நாட்டு நிகழ்ச்சிகள் ஆகியவைகளைச் சித்திரித்துக் காட்டுகின்றன. அவற்றுள் பல கொங்கு வேளாளரில் வெண்டுவன் குலம் பற்றிய செய்திகளைத் தாங்கி நிற்கின்றன.

### கொங்கு காணியான பட்டயம்

கொடுமணல் தம்பிராட்டிபாளையம் நா.நாச்சிமுத்துப் புலவர் வீட்டில் பெற்ற கொங்கு காணியான பட்டயம் என்னும் ஓலைச்சுவடி தற்போது ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது.

கொங்கு வேளாளர் குலப் பெருமக்கள் சோழ நாட்டிலிருந்து குடியேறிக் கொங்கு நாட்டில் நாடு, காணி, ஊர் இவைகளைப் படைத்துக் கொண்டதை இப்பட்டயம் விளக்குகிறது. குல குருக்கள், மக்கள் பற்றிய செய்தியும் உள்ளன.

சோழன் கரிகாலன் வரலாற்றை விரிவாகக் கூறும் இந்தப் பட்டயம் கரிகாலனுக்கு ஏற்பட்ட சித்தப்பிரமை நீங்க அவன் கொங்கு நாட்டில் அணைகள் கட்டி, ஆலய தரிசனம் செய்யவேண்டும் என்று கூறுகிறது. அப்போது திருக்கடையூர் குலகுரு ஆண்ட சிவசுப்பிரமணியக் குருக்களும் உடன் வருகிறார். கொங்கு நாட்டில் குலகுருக்கள் நியமனம் செய்யப்படுகின்றனர். மார்க்கண்ட கோத்திரத்துத் திருக்டையூர் காலகாலேசுவரர் ஆலயக் குருக்களுக்குக் கொங்கு நாட்டில் பெரும்பழனை நகர், அமுக்கயம், கத்தாங்கண்ணி, காங்கேயத்துக் கீரனூர், வீரசோழ நகரம், பச்சைநகரம், கழனியூர், கொடுமுடி, கரூர், மடவளாகம், பேரூர் ஆகிய ஊர்க் காணியாளர்கள் உரியவர்கள் என்று கூறப்பட்டுள்ளது. இன்றும் கத்தாங்கண்ணிக் குலகுருவாக உள்ள திரு. வேதாந்த பண்டிதகுருசுவாமிகள் மார்க்கண்டேய கோத்திரத்தாரே என்பது குறிப்பிடத்தக்கது.

### குறுப்புநாட்டுப் பட்டயம்

இப்பட்டயத்தின் ஓலைப் பிரதியும், செப்பேட்டு நகலும் ஈரோடு கலைமகள் அருங்காட்சியத்தில் உள்ளது. குறுப்பு நாட்டுக்குரிய

காணியாளர்களை வரிசைப்படுத்தி இப்பட்டயம் கூறுகிறது.

கொங்கு வேளாளக் கவுண்டர்களில் குறுப்பு நாட்டுக்குரிய முதல் காணியாளர்கள் எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தினர். இரண்டாவது காணியாளர்கள் பொருளந்தை, பெரியன், வெண்டுவன், கண்ணந்தை, செல்லன், சாத்தந்தை, ஓதாளர், தோடை குலத்தினர். மூன்றாவது காணியாளர்கள் படைத்தலைக் கவுண்டர்கள். விசயமங்கலம் விசயாபுரி அம்மன் கோயிலிலும், ஊத்துக்குழி கதித்தமலை கதித்தாலர் கோயிலிலும் இதே வரிசைப்படி காணி உரிமைகள் அளிக்கப்படவேண்டும் என்று எழுதப்பட்டுள்ளது. கத்தாங்கண்ணிக் காணியாளர்களான வெண்டுவன் குலத்தார் உட்படக் குறுப்புநாட்டு 32 ஊரவர்களும் கூடி இம்முடிவை எடுத்துள்ளனர். காடையூர், காங்கேயம், பழையகோட்டை, சங்கரண்டாம்பாளையம் பட்டக்காரர்களும் இப்பட்டயத்தில் கையெழுத்திட்டுள்ளனர். இதன்படி விசயமங்கலம் விசயாபுரி அம்மன் கோயிலிலும், ஊத்துக்குழி கதித்தமலையாண்டவர் கோயிலிலும் வெண்டுவன் குலத்தாருக்கு இரண்டாவது உரிமை உண்டு என்பது புலப்படுகிறது.

### கொடுமணல் பட்டயம்

ஈரோடு மாவட்டம், தாராபுரம் வட்டம், புதுப்பைப் புலவர் பரம்பரையினரிடமிருந்து பெற்ற இந்த ஓலைப்பட்டயம் தஞ்சாவூர்த் தமிழ்ப்பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் உள்ளது.

குறுப்புநாட்டில் உள்ள 32 ஊர்க் காணியாளர்களும் அவ்வூர்களைச் சேர்ந்த உட்கிராமங்களில் உள்ள அனைத்துக் கொங்கு வேளாளக் கவுண்டர்களும் கதித்தமலை முருகன் சன்னதியில் கூடித் தங்களுக்குப் புலவர்களை நியமனம் செய்துகொண்டதை இப்பட்டயம் விரிவாகக் கூறுகிறது.

சுள்ளிப்பாளையம் சேனாபதிப் புலவரை நீக்கம் செய்து தென்திசைக் கொங்கு வேளாளர்கள் கொடுமணல் பழனிப்புலவன் மகன் சென்னிமலைப் புலவனைத் தங்கள் சமூகத்தில் பால் சாப்பிடும் புலவராக நியமனம் செய்தனர். அவருக்குக் கொடுக்க வேண்டிய வரிசைகளை இப்பட்டயம் விரிவாகக் கூறுகிறது.

இப்பட்டயத்தில் கத்தாங்கண்ணி ரட்டிபாளையம் காணியாளர்கள் முத்துக் கவுண்டர், வெள்ளைக் கவுண்டர், சிலம்பகவுண்டர், சின்னண கவுண்டர், குட்டியண கவுண்டர், கயிலாசக் கவுண்டர் ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர். பாப்பம்பாளையம், வெங்கலப்பாளையம், சுப்பனூர், அணைப்பாளையம் வெண்டுவன் குலத்தாரும் இதில்

குறிக்கப் பட்டுள்ளனர்.

**காடையூர்ப் பட்டயம்**

கத்தாங்கண்ணி உள்ளிட்ட தென்கரை வீரசோழபுர நாட்டில் கோப்பண மன்றாடியார் என்பவர் அதிகாரம் செலுத்திவந்தார். அவர் மதுரை நாயக்கருக்குக் கொடுக்க வேண்டிய வரியை வசூலித்து முறையாகச் செலுத்தவில்லை. காடையூர்ப் பொருளந்தை குலப் பெத்தான் காங்சயமன்றாடியார் நாயக்க மன்னருக்காகப் போரிட்டுக் கோப்பண மன்றாடியாரை வென்றார். பெத்தான் காங்கய மன்றாடியாருக்கு மதுரை நாயக்க மன்னன் பல பரிசுகளையும் திருப்பூர்க் கோட்டையையும் பரிசாக அளித்தான்.

காடையூர்ப் பட்டக்காரர் ஆட்சியில் காணியுரிமையுடைய கொங்கு வேளாளர்கள் தங்களுக்குத் தனி நாவிதன் வேண்டும் என்பதற்காகக் குமரன் என்பவனை நியமித்திருந்தனர். மீண்டும் கோப்பண மன்றாடியாரோடு ஏற்பட்ட போரில் குமரன் வீரமரணம் அடைகின்றான்.

குமரன் நாவிதன் மனைவி சின்னம்மாளையும் மகன் கைக்குழந்தை காங்கனையும் காப்பாற்றுகின்றனர் தென்குறுப்பு நாட்டுக் கொங்கு வேளாளக் காணியாளர்கள்.

திருப்பூர், சுந்தரபாண்டியநல்லூர், ஊத்தலூர், பெரியபாளையம், அமுக்கயம், கத்தாங்கண்ணி, கொடுமணல் காணியாளக் கவுண்டர்கள், அய்யர், கணக்கர், தட்டார், ஆண்டி, நாயக்கர், தோட்டி இவர்கள் எல்லோரும் ஒன்றாகக் கூடி நாவிதன் காங்கனுக்கு நன்செய், புன்செய், வயல் ஆகிய நிலங்களை அளித்துப் பாறையில் கல்வெட்டும் வெட்டினர்.

இப்பட்டயத்தில் கத்தாங்கண்ணி வெண்டுவன்குலச் சார்பில் பச்சைலிங்கக் கவுண்டர் என்பவர் கையெழுத்திட்டுள்ளார். கத்தாங்கண்ணிக்குரிய கணக்கர் திருமாட கோத்திரம் கைலாசபிள்ளை என்பவரும், தோட்டி ஆயி என்பவரும் குறிக்கப் பட்டுள்ளனர். கத்தாங்கண்ணி சிவந்திகுலம், கண்ணகுலம், பில்லன் குலத்தாரும் இப்பட்டயத்தில் கையெழுத்திட்டுள்ளனர்.

**கண்ணகுலப் பட்டயம்**

கன்னிவாடி கே. எஸ். சின்னசாமிக் கவுண்டரிடமிருந்து கண்ணகுலப்பட்டயம் என்ற ஓலைச்சுவடி பெறப்பட்டது.

கண்ணகுலத்தார்கள் கன்னிவாடியிலிருந்து கீழ்க்கரைப் பூந்துறை

நாடு வரை பல்கிப் பரந்து குடியேறிய வரலாறு இப்பட்டயத்தில் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

கண்ணகுல மோரூர், தகடப்பாடித் தலைவர் சூரிய காங்கய மன்றாடியார் மகன் முத்துச்சாமிக் கவுண்டர் வெள்ளகோயில் ஆந்தை குலம் செல்லப்ப கவுண்டர் மகள் காளியம்மாளையும், மூலனூர் பூசகுலச் சந்தராயி கவுண்டிச்சியையும், மணநாடு வெண்டுவகுலக் காளியப்ப கவுண்டர் மகள் வேலம்மாளையும் திருமணம் செய்து கொள்ளுகிறார். மூவருக்கும் குழந்தையில்லை. திருவரங்கம் சென்று வழிபட்டபின் காளியம்மாளுக்கு ஆண் குழந்தையும், வெண்டுவகுல வேலம்மாளுக்குப் பெண் குழந்தையும் பிறக்கிறது. முத்துசாமிக் கவுண்டர் இறக்கவே மூவரும் தீப்பாய்ந்து இறந்துவிடுகின்றனர். படைக்கலக்காரி என்று வழிபடும் தெய்வமாக மாறிவிடுகின்றனர்.

செங்கற்படையாக வெண்டுவகுல வேலம்மாள் உள்ளிட்ட ஏழு வீரமாத்திப் பெண்களின் கோயில்கள் மணலூரில் இன்றும் உள்ளது.

**பேரோடு கரிச்சிக்குமாரர் செப்பேடு**

ஒரு வழக்கின் பொருட்டு இச்செப்பேடு நீதிமன்றத்தில் அளிக்கப்பட்டுள்ளது. பேரோடு செல்லப்பம்பாளையம் இராமசாமிப் பூசாரியாரிடம் இச்செப்பேட்டின் நகல் உள்ளது.

பேரோடு கரிச்சிக்குமாரர் கோயிலுக்குரிய காணியாளர்கள் வெண்டுவன், பண்ணை, பெருங்குடியான் குலத்தினர், இவர்கள் மூவரில் வெண்டுவன் குலத்தார் முதன்மைக் காணியாளர்கள் ஆவர்.

கரிச்சிக் குமாரருக்குத் திங்கட்கிழமைதோறும் சிறப்புப் பூசை செய்ய வேண்டும் என்று திருமலைப் பூசாரியை நியமனம் செய்கின்றனர். அவ்வவர்க்கு அடுத்த மூத்த மகனுக்குப் பூசை செய்யும் உரிமை உண்டு என்ற நிர்ணயம் செய்கின்றனர். பூசாரிக்குக் குடித்தனம் செய்வோர் (குடும்பம்) இரண்டு பணமும், மற்றவர்கள் ஒரு பணமும் அளிக்க ஒப்புக் கொள்கின்றனர்.

கரிச்சிக்குமாரருக்கு முப்பாடு, பச்சைப்பந்தல் உரிமை வெண்டுவன்குலத்தாருக்கும், கட்டியம் செய்தல் பண்ணை குலத்தாருக்கும், திருக்கொடிப் பாத்தியம் பெருங்குடியான் குலத்தினருக்கும் உரியது என்று தீர்மானம் செய்தனர்.

கரிச்சிக்குமாரர் கோயிலில் கல்லும் காவேரியும் சந்திரரும் சூரியரும் உள்ளவரை இம்முறையில் வழிபாடு, விழா நடைபெற வேண்டும் என்று எழுதித் தந்து கையொப்பமிட்டுள்ளனர். இவ்வுரிமை

இன்றும் நடைபெறுகிறது.

**தென்னிலைச் செப்பேடு**

தென்னிலை வேட்டுவப் பட்டக்காரர் எம்.ஏ. பகவதிக்கவுண்டர் வீட்டில் உள்ள இரண்டு செப்பேடுகள் கொங்குச் சமுதாய வாழ்வில் மிகவும் முக்கியமானவையாகும் கொங்கு நாட்டின் பூர்வீகக் குடிகளுள் ஒருகுடியினராகிய வேட்டுவ குலப் பெருமக்கள் தங்களுக்குச் சொந்தமான காணியூர்களையும், காணிக் கோயில்களையும் கொங்கு வேளாண் பெருமக்களுக்கு மாற்றியதை இச்செப்பேடுகள் குறிக்கின்றன. மங்கலம் என்ற ஊரின் கோயில் உரிமையை வேட்டுவகுலப் பெருமக்கள் வெண்டுவன் குலத்தாருக்கு மாற்றியளித்ததை ஒரு செப்பேட்டின் பகுதி கூறுகிறது.

'செயவருஷம் தை மாதம் 25 ஆம் தேதி மங்கலம் காளியம்மன் கோயில் ராசமுப்பாடு கோயில் முப்பாடு கொடுத்தது வெள்ளாள குலம் வெண்டுவன் குலத்துக்கு சாட்சி வெங்கம்பூர் சம்பந்தராயக் கவுண்டன் போத்தி சேசுவராயக் கவுண்டன், சல்லி காளத்தி கவுண்டன், ஆத்தூர் மாந்தைப்படை வேட்டுவன் வண்டிக் கவுண்டன் சாட்சி, சிறுத்தலை வேட்டுவன் சாட்சி, கிழங்கு நாடு சுப்பையன் சாட்சி, கண்டிக் கவுண்டன் சாட்சி, திருமலை கவுண்டன் சாட்சி. வராக வேட்டுவன் வாங்கி கொண்டது பொன்னு 150, என்பது செப்பேட்டுப் பகுதி.

முப்பாட்டுக்காரன், பண்டாரம், காளியாண்டி, பறையன் கருப்பன் ஆகியோருக்கு அளிக்க வேண்டிய பொன், நெல், ஆட்டுக்கிடாய் ஆகியவை வழக்கமாகக் கொடுக்க வேண்டிய அளவு கொடுக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. மேற்கண்ட பட்டயங்கள் அனைத்தும் இந்நூலாசிரியர் தொகுத்துப் பதிப்பித்த 'கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்' என்னும் நூலில் உள்ளன.

**கூடலூர்ச் செப்பேடு**

மணலூர் நாட்டுக் கூடலூர்க் கிராமம் மேல்பாகம் பெரிய மதியாக் கூடலூரில் இருக்கும் மணியம் என். பொன்னுசாமிக் கவுண்டரிடம் இச் செப்பேட்டின் நகல் உள்ளது. சின்ன தாராபுரம் கவிஞர் புதுமதியன் அவர்கள் தம் 'நல்ல தாய்' வரலாற்று நூலில் இதனை வெளியிட்டுள்ளார்.

மேலே கூறப்பட்ட தென்னிலைச் செப்பேடுகள் கூறும் விபரம் போல கொங்கு வேளாளர்கள் வேட்டுவ குலத்தாரிடமிருந்து காணி பெற்றது போலக் கூடலூர் உரிமையைப் பண்ணை குலத்தார் பெற்ற விபரம் கூறப்படுகிறது.

பின்னர் கூடலூர்க் கிராமம் பண்ணை குலத்துப் பெரியண கவுண்டர் தன் மகள் முடப் பெண்ணான ராசம்மாக் கவுண்டச்சியை வெண்டுவன்குலம் தில்லைக்கவுண்டன் மகன் பொன்னம்பலக் கவுண்டருக்குத் திருமணம் செய்து கொடுத்து வெண்டுவன்குலத்தார் கூடலூர்க் காணி பெற்ற விபரம் இச் செப்பேட்டில் கூறப்படுள்ளது. இன்று கூடலூர்க்காணி வெண்டுவன் குலத்தாருக்கு உள்ளது.

## 12. கம்பரும் வெண்டுவ குலமும்

சோழநாட்டுத் திருவழுந்தூரில் பிறந்து சடையப்பவள்ளல் என்னும் கொங்கு வேளாளரால் ஆதரிக்கப்பட்டுச் சோழ மன்னன் அவையை அலங்கரித்து இராமாயணம் என்னும் பெருங்காப்பியத்தைப் படைத்தவர் கம்பர்.

தமிழுக்குக் கதி எனக் கம்பராமாயணத்தையும், திருக்குறளையும் கூறுவார் மதுரைத் தமிழ்ச்சங்கம் நிறுவிய பாண்டித்துரைத் தேவர். தமிழ்நாட்டுக்குப் பெருமை கம்பர் இங்கு அவதாரம் செய்ததே என்று பாரதியார் கூறுவார். 'புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்பார் பாரதியார். கம்பர், வள்ளுவர், இளங்கோ போல் பூமியில் யாருமே சிறப்புடன் பிறந்ததில்லை என்பார் அவர். எங்கும் பாரதியார் கம்பரை முதலில் வைத்துக் கூறப்பட்டதைக் காணலாம்.

சோழ மன்னனின் அவைக்களப் புலவராக விளங்கிய கம்பருக்கும் சோழனுக்கும் கருத்து வேறுபடவே கம்பர் கொங்கு நாடு வந்ததாக வரலாறு கூறுகிறது. சாத்தந்தை குலத்தைச் சேர்ந்தவரும், பண்ணையங்களுக்கு அதிபருமாகிய சடையப்ப வள்ளலின் உறவினர்களாகிய கொங்கு நாட்டு வேளாண் பெருமக்கள் கம்பரை வரவேற்று உபசரித்துப் போற்றினர்.

கம்பரும் கொங்கு வேளாண் பெருமக்களுக்குத் திருமணத்தில் பாடப்படும் மங்கல வாழ்த்துப் பாடலைப் பாடிக் கொடுத்தார்.

*'கம்பர் சொன்ன வாழ்த்து உரைத்து*
*மங்கலமும் கன்னி சொல்ல'*

என்று மங்கலவாழ்த்து வரிகளால் அது உறுதிப்படுகிறது. கொங்கு வேளாளர் இல்லங்கள்,

*'கம்பர் பட்சம் தவிறாத வாசல்'*

என்று புலவர்களால் சிறப்பிக்கப்பட்டது. இன்னும் ஏரெழுபது, திருக்கைவழக்கம், கம்பர்வாழி ஆகிய நூல்களையும் வேளாளர் பொருட்டுக் கம்பர் இயற்றினார்.

இவைகள் அனைத்தும் முன்பு கொங்கு வேளாளர் திருமண வீடுகளில் படிக்கப் பட்டதாகப் பல ஆவணங்கள் கூறுகின்றன. முன்பு கொங்கு வேளாளர் திருமண வீடுகள் இலக்கிய மேடைகளாகவே விளங்கியிருக்கின்றன. 'கம்பர் தமிழ்' என்று வேளார்கள் அவற்றைப்

புகழ்ந்தனர். கம்பர் தமிழ் என்றும் நின்று நிலவும் என்ற கருத்தில் 'சந்திரசூரியர் உள்ளவரை கோயில் அறக்கொடைகள் நின்று நிலவவேண்டும்' என்று கூறும் சாசன மரபுபோல 'கம்பர்தமிழ் உள்ள அளவும்' என்று கொங்கு வேளாண் பெருமக்கள் தங்கள் ஆவணங்களில் எழுதினர்.

கொங்கு வேளாளர்களைப் புகழ்ந்து பாடிய புலவர்கள் பட்டியலில் கம்பர் பெயரே முதலாவதாகக் கூறப்படுகிறது. கம்பர் வேளாளர்களுக்காகக் காவிரிக்கரையை அடைத்து வேளாண் நிலங்களைக் காப்பாற்றினார். அரசர் கொடுக்கும் நவமணிகளைவிட, பொன்னையும் பொருளையும்விட, ஏன் யானைப் பரிசை விடக் கொங்கு வேளாளர் தானியம் அடிக்கும் களத்தில் கொங்கு முறத்தால் அளந்துபோடும் கம்பு பெரிது என்று கம்பர் பாடினார். வேளாளர்களே பெரியவர்கள் என்று சோதனையில் நிரூபித்துக் காட்டினார். குளித்தலையில் காவிரியில் நேரடியாகச் சோழனுக்காகக் கொங்கு நாட்டாரின் விருந்தின் பெருமையைக் காட்டினார். 'காப்பவர் என்றும் வேளாளர்காண், என்று பாடினார். வேளாளரை 'மேழித்தெய்வம்' என்றார்.

இவ்வளவு சிறப்புக்கள் காரணமாகவும், கொங்கு நாட்டுக்கும் கம்பருக்கும் உள்ள தொடர்பு காரணமாகவும் கம்பரை மிகவும் மதித்துப் போற்றிய கொங்கு வேளாளர்கள் கம்பருக்கு,

*'கல்லும் காவேரியும் சந்திராதித்தர் உளமட்டும் கம்பநாடன்*
*சொல்லிய செந்தமிழ்க்கு அடிமைதுரை நாங்கள்'*

என்று அடிமைச்சாசனம் எழுதித் தந்தனர்.

*'அம்பல வாணர்மின் காமாட்சி அம்மன் அணிவரையில்*
*கம்பருக்கு என்றும் அடிமை'*

*'நாவில் புகழ்க்கம்ப நாடர்க்கு அடிமை என்றே*
*மாவைக் கரைத்துமுன்னே வைக்கும்கை'*

*'சிங்கா தனம்பெற்ற கம்பன் தமிழ்க்கடிமை*
*செய்தினிய கீர்த்தி பெற்றோர்'*

என்ற பாடல் பகுதிகள் கம்பருக்குக் கொங்கு வேளாளர்கள் அடிமைபுகுந்த சிறப்பைக் காட்டும்.

இவ்வாறு கம்பருக்குக் கொங்கு வேளாளர்கள் அடிமையானதற்குக்

காரணம் கம்பர் வேளாளர் குறித்துத் தமிழ் பாடியதே காரணம் என்று கொங்குப் புலவர் பட்டயம் கூறுகிறது.

> ‘காஞ்சிபுரத்தில் யேகாம்பரர் அறிய ஏரெழுபதுத் தமிழ் அரங்கேற்றி வைத்து மாத்துளி குரித்தெளித்தவுடனே காமாட்சியம்மன் முன்னிலைக்குச் சத்திய சாட்சியாக கம்பர் தமிழ் உள்ள அளவும், காராள வம்சம் உள்ள அளவும், காளிமலை உள்ளவரைக்கும் கெங்கா பரமேசுவரியார் அறியக் கம்பருக்கு அடிமைச் சாதனப் பட்டயம் எழுதிக் குடுத்துப் புலமை நாட்டி வைத்துக் கொண்டோம்’

என்று கொங்கு ஆவணமான கொங்குப் புலவர் பட்டயம் கூறுகிறது.

கொங்கு வேளாளரில் வெண்டுவ குலத் தீத்தான் செவ்வந்தி என்னும் வள்ளல் தோன்றினார். அவர் புலவர்கள் பலரைப் போற்றி உபசரித்தார். புலவர்கள் தீத்தான் செவ்வந்தி புகழ் பாடினர். புலவர் பலர் அவர் இல்லத்தில் எப்பொழுதும் இருக்கும். அவர் வீடு தமிழ்ச்சங்கம் போலவே விளங்கியது.

கொங்குநாடு வந்த கம்பரை வெண்டுவ குலத் தீத்தான் செவ்வந்தி வரவேற்றுப் பரிசுகள் பலவற்றை வழங்கினார். கம்பரை உபசரித்த அவர் இதுவரை எவரும் செய்திராத சில செயல்களைச் செய்தார். அதன் மூலம் கம்பர் மீதும் தமிழின் மீதும் தனக்குள்ள பெரும் பற்றை வெளிப்படுத்தினார்.

ஒருமுறை கம்பர் பல்லக்கில் வந்தார். வெண்டுவ குல தீத்தான் செவ்வந்தி கம்பருக்குத் தெரியாமல் பல்லக்கைச் சுமக்கும் ஆட்களுடன் ஒருவராகக் கம்பரின் பல்லக்கைச் சுமந்தார்.

கம்பர் அருகே கவரி வீசவும், எச்சில் காளாஞ்சியை ஏந்தி நிற்கவும் பணி ஆட்கள் உண்டு. ஒருமுறை தீத்தான் செவ்வந்தி அப்பணியைச் செய்தார்.

எல்லாவற்றிற்கும் மேலாகக் கம்பரின் திருவடிச் செருப்புக்களைக் கண்ட தீத்தான் செவ்வந்தி கம்பர் திருப்பாதங்களைத் தாங்க இவை என்ன தவம் செய்தனவோ என்று அவைகளை எடுத்துத் தன் தலைமீது வைத்துக் கொண்டார். கம்பருக்கு நானும் என் வழியினரும் என்றென்றும் அடிமைகள் என்று அடிமைச் சாசனம் எழுதித் தந்தார்.

இதனைக் கொங்கு மண்டல சதகம் பாடிய வாலசுந்தரக் கவிராயர் தம் நூலில் பாடியுள்ளார்.

*தண்டிகை தாங்கியும் காளாஞ்சி ஏந்தியும்*
*தமிழ்செய்கம்பர்*
*அண்டையில் பாதச்சம் மாளியும் தூக்கி*
*அடிமையும்பட்டு*
*வெண்டுவ கோத்திரன் தீத்தான் செவ்வந்தி*
*விளங்கு கங்கை*
*மண்டலம் கீர்த்தி தனைப்படைத் தான்கொங்கு*
*மண்டலமே.*

கொங்கு வேளாளரில் வண்ணக்கன் குலத்துத் தலைவர் நல்லவன், கோட்டாறு குலத்து மசக்காளி வேலன், செம்ப குலத்து அமராவாதி, சாத்தந்தை குலத்து வெள்ளோடு முத்தையன் ஆகியோரும் கம்பருக்கு அடிமைத்தொண்டு புரிந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன.

மற்றவர்கள் அடிமையானோம் என்று மட்டுமே கூற வெண்டுவகுலத் தலைவர் தீத்தான் செவ்வந்தி கம்பருக்குப் பணிவிடைகள் பல செய்தது இலக்கிய ஏட்டில் நீங்கா இடம் பெற்றுள்ளது. வாழ்க தீத்தான் செவ்வந்தி புகழ் !

# 13. குலகுருக்கள்

கொங்கு நாட்டில் சைவம் சிறப்புற்று விளங்கியது. கொங்கு நாட்டில் தேவாரத் திருப்பதிகம் பெற்ற திருத்தலங்கள் ஏழு. அவை கரூர், வெஞ்சமாங்கிகூடல், அவிநாசி, பவானி, கொடுமுடி, திருச்செங்கோடு, திருமுருகன்பூண்டி என்பன. அவ்வேழு தலங்களையும் ஒன்றாகச் சேர்த்து வணங்கும் வழக்கம் கொங்கு நாட்டில் இருந்தது. அதனை,

*ஆதி கருவூர் அணிவெஞ்சை மாக்கறைசை*
*நீதி அவிநாசி நீள்நணா-மேதினியின்*
*தஞ்சமாம் செங்குன்றூர் தண்முருகன் பூண்டிதனை*
*நெஞ்சமே நித்தம் நினை*

என்ற வெண்பா சிறப்புடன் விளக்குகிறது. காங்கேய நாட்டுப் பட்டக்காரர்கள் ஒரே நாளில் இவ்வேழு தலங்களையும் வணங்கும் வழக்கம் கொண்டிருந்தனர் என்பதைத் தணிப்பாடல்கள் விளக்குகின்றன.

இவ்வாறு சைவம் சிறந்த கொங்கு நாட்டில் வாழும் கொங்கு வேளாண்குலப் பெருமக்கள் பலரும் தங்களுக்கென்று தனித்தனியாகக் குலகுருக்களை நியமித்துக்கொண்டு பலர் தீட்சை பெற்றுச் சைவசமயச் சிறப்புடன் நலமாக எல்லாப் பேறும் பெற்று வாழ்ந்தனர். குலகுருக்கள் சைவம் பேணி, ஆலயங்களைக் காத்து, அடியார்க்கு ஆசி வழங்கிச் சிறப்புடன் திகழ்ந்தனர்.

கொங்கு நாட்டில் முதலில் குடியேறிய கொங்கு வேளாண பெருமக்கள் தங்கள் குலகுருவுடன் வந்தனர் என்பதைப் பல செப்பேடுகள் கூறுகின்றன. 24 நாடுகள் பிரித்ததும் நாட்டுக்கு ஒரு குலகுருவாக 24 பேரை நியமித்தனர் என்று ஒரு பட்டயம் கூறுகிறது.

சோழர்கள் கொங்கு நாடடைக் கைப்பற்றி அதிகாரம் செலுத்தும்போது சோழ நாட்டிலிருந்து சிறந்துள்ள ஆதி சைவர்களைக் கொங்கு நாட்டுககு அழைத்து வந்ததாகக் கொங்குமண்டல சதகம் கூறுகிறது.

*குலசே கரன்குலோத் துங்கசீர்ச் சோழர்கள்*
*கொங்கினிடை*
*தலபூசை நன்குறத் தன்நாட்டு ளாரில் சமர்த்தர்கண்டு*
*நிலையான காணியும் மேன்மையும் ஈய நிதானமுறு*
*வலவாதி சைவர்கள் வாழ்வதன றேகொங்கு மண்டலமே*

என்ற சதகப்பாடல் மூலம் இதனை அறியலாம். ஒருசில செப்பேடுகள் சோழ நாட்டுத் திருக்கடையூரிலிருந்து அவர்கள் வந்ததாகக் கூறுகின்றன. சில குருக்கள் காஞ்சிபுரம் அல்லது சிதம்பரம் தம் பூர்வீகக் காணியூர் என்று கூறுகின்றனர்.

திருச்செங்கோட்டுத் திருப்பணி மாலையும் இதனை ஒரு பாடல் மூலம் விளக்குகிறது.

*காரணிக மானவள வன்கலி யுகாதியில்*
*கட்செவி மலைப்பரமனைக்*
*கந்தனை வணங்கிமக பூசையுண் டாக்கினன்*
*கைலாச நாதசிவனைத்*
*தாரணி புகழ்ந்திடத் தாபித்த னன்பெரிய*
*தன்கூப மதுகண்டனன்*
*சைவமறை மோர்பூச னைக்கினிய ராகவே*
*தனதுமண் டலமேவியே*
*சீரணிசீ காழியா லம்பாயர் காசிபர்*
*திறத்தோடர்ச் சனை செய்யவே*
*திதமுற அமைத்தனன் மனுநீதி முறைகண்ட*
*செம்பியன் பெற்ற பெருமை*

என்ற பாடல் மூலம் அதனை அறியலாம்.

கொங்கு வேளாளர்கட்குக் குலகுருக்கள் இருந்தனர் என்பதைப் பல செப்பேடு பட்டயங்கள் உறுதிப்படுத்துகின்றன.

*'கந்தாமாபுரிப் பட்டணம் அதிலுள்ள பதினெண்குடிகள் இந்தத் திருமுருகன் பூண்டி... ஆதீனத்துக்கு உடையவராகிய காசிப கோத்திரத்துக் குருக்களானபடியினாலே தன்னுடைய சிஷயனாகிய வீரவிக்கிரம சோழியாண்டாக் கவுண்டர்'*

என்பது ஒரு எடுத்துக்காட்டாகும்.

கொங்கு வேளாளர்கள் தங்கள் குலகுருக்களை எவ்வாறு மதித்தனா என்பதைக் கொங்கு நாட்டுச் செப்பேடு ஒன்று பின்வருமாறு விளக்குகிறது.

'நாங்கள் யெந்த நாட்டிலே யெந்த ஊரிலேயிருந்தாலும் எங்கள் கோத்திரத்தார் தலைககட்டு ஒன்றுக்கு நாகரம் பணம் அஞ்சு வருஷம் பிரதி குடுத்துச் சஞ்சாரம் வந்தபோது சஞ்சாரக் காணிக்கையும் அப்பணைப் படிக்கி உபதேசம் பாதபூசை

முதலானதும் பண்ணிக்கொண்டு எங்கள் வமுசத்தார் புத்திரபவுத்திர பாரம்பரியமாயி பாதபூசை பண்ணிக்கொண்டு சன்னிதானத்துலே தீட்சை மகாமந்திர உபதேசம் பண்ணிக் கொண்டு சுவாமியார் தெண்டினை கண்டினை ஆணை ஆக்கிணை அபராதத்துக்குட்பட்டு நடந்து கொள்ளுவோமாகவும்.

எங்கள் கோத்திரத்தார் எந்த நாட்டிலே எந்த ஊரிலே காணி வாங்கி அதிகாரம் பண்ணினாலும் சுவாமியார் பாதத்துக்குப் பணிந்து நடந்து கொள்ளுவோமாகவும். இப்படி நடந்துவரும் காலத்தில் இதுக்கு விகாதம் சொல்லாமல் பரிபாலனமாயி எங்கள் வமுசத்தார் பயபக்தியாய் நடந்து வந்தவன் சுகமாயி தனசம்பத்தும் தானிய சம்பத்தும் அஷ்டைஸ்வரியமும் ஆயுளாரோக்கியமும் தேவப்பிரசாதமும் குருப்பிரசாதமும் மேன்மேலும் உண்டாகி கல்லும் காவேரிப் புல்லும் பூமியும் சந்திராதித்தாள் உள்ளவரைக்கும் சுகமாயிருப்பார்கள்'.

உடல்பொருள் ஆவி மூன்றையும் குலகுருவுக்கே தத்தம் செய்து பட்டயம் எழுதித் தந்துள்ளனர். வாரிசு இல்லாத சொத்து குலகுருவுக்கே என்றும் சிலர் கூறினர். 'குருவே சிவம்' என்று திருமூலர் முதலிய சான்றோர்கள் கூறிய சிறந்த வழியில் கொங்கு வேளாண் பெருமக்கள் நடந்துள்ளனர்.

குருக்கள்புரம், குருக்கள்பாளையம், தம்பிரான்வலசு போன்ற தனி ஊர்ப் பகுதிகளைக் குருக்களுக்குக் கொடையாக விட்டு அவர்களுக்கென்றே தனி ஊரை ஏற்படுத்தினர்.

கொங்கு நாட்டுக்கு நியமிக்கப்பட்ட குலகுருக்களில் பெரும்பழனைநல்லூர், அமுக்கயம், கத்தாங்கண்ணி, காங்கயத்துக் கீரனூர். வீரசோழநகரம், பச்சை நகரம், பழனியூர், கொடுமுடி, கருவூர், மடவளாகம், பேரூர் இது முதலாகிய தலங்களில் குருதலம், குருத்துவம் பூசை முதலான காரியங்களுக்கு மார்க்கண்ட கோத்திரத்தார்களைத் தீர்த்தம் பிரசாதம் கொடுக்க நியமித்தார்கள். அவர்கள் காலகாலதேவர் எழுந்தருளியுள்ள திருக்கடையூரைச் சேர்ந்தவர்கள்.

கத்தாங்கண்ணிப் பட்டயத்திலும், காடையூர்ப் பட்டக்காரர் பட்டயத்திலும் மேற்படி மார்க்கண்டேய கோத்திரம் சார்ந்து வேதாந்த பண்டிதர் என்பவர் குறிக்கப்படுகிறார். வேளாளர்கள் செய்து கொண்ட ஒப்பந்தங்களில் குருக்களும் முன்னிலை வகித்து சாட்சிக் கையொப்பம் போட்டுள்ளனர்.

இன்றும் அதே மார்க்கண்டேய கோத்திரம் வேதாந்த பண்டிதர் வழியினரே கத்தாங்கண்ணி வெண்டுவகுலம் உள்ளிட்ட

வேளாளர்களுக்குக் குலகுருவாக விளங்குகிறார்கள். முன்பு கத்தாங்கண்ணியிலேயே அவர்கள் திருமடம் அமைத்து அடியார்களுக்கு ஆசி வழங்கி வந்தனர். பின்னர் அவர்கள் கங்கநாயக்கன் பாளையம், முதலிபாளையம் ஆகிய இடங்களில் குடிபெயர்ந்து இப்பொழுது திருப்பூரில் மடம் அமைத்து வாழ்ந்து வருகின்றனர்.

கத்தாங்கண்ணிக் காணியாளர்களான வெண்டுவன் குலத்தாரின் சமயம் தொடர்பான நற்காரியங்களுக்கும், வழிபாடு, விழா, திருப்பணி, குடமுழுக்கு ஆகியவற்றிலும் அரிய ஆலோசனைகள் வழங்கி வழிநடத்தி வருகிறார்கள். திருப்பூரில் இருந்தாலும் இன்று கத்தாங்கண்ணி ஆதீனத் தலைவராக விளங்குபவர்கள் தவத்திரு வேதாந்தபண்டித குருசுவாமிகள் ஆவார்கள். குருவுக்கு ஏற்ற சீடர்களாகக் கத்தாங்கண்ணி வெண்டுவகுலப் பெருமக்கள் சிறப்புற்று விளங்கி வருகிறார்கள்.

# 14. புகழ்பாடிய புலவர்கள்

கொங்கு நாட்டிலும், கொங்கு வேளாளர் சமூகத்திலும் தமிழ்ப் புலவர்கட்குப் பெரும் மரியாதை இருந்தது. தனிப்பட்ட செல்வந்தர்கள், தமிழ் அன்பர்கள் புலவரிடத்து மரியாதை காட்டிய நிகழ்ச்சியை நாம் அறிவோம். ஆனால் ஒரு சமுதாயமே கூட்டாகப் புலவர்கட்கு மதிப்பும், மரியாதையும் காட்டிய நிகழ்ச்சி கொங்கு வேளாளர் சமுதாயத்தில்தான் நடைபெற்றது.

தங்கள் வீட்டு மங்கல நிகழ்ச்சிகளில் 'தமிழ் ஐவாணர்' என்று கொங்கு நாட்டில் பாராட்டிப் புகழப்பெறும் பட்டன், புலவன், பண்பாடி, தக்கைகொட்டி, கூத்தாடி ஆகிய ஐவரை அழைத்துச் சிறப்புச் செய்வர்.

*'பட்டன் புலவன் பண்பாடி தக்கைகொட்டி*
*திட்டமாய்ச் சோபனம் செப்பிமுன் னேவர'*

சடங்குகள் நடைபெற்றிருக்கின்றன. இத்தொடர்கள் கொங்கு வேளாளர் மங்கல வாழ்த்தில் வருகின்றன.

சோழர் காலத்தில் கொங்கு வேளாண் பெருமக்களுக்கு நாட்டுப் புலவர்களும், காணிப் புலவர்களும் நியமிக்கப்பட்டனர். இடைக்காலத்தில் இவ்வழக்கம் நின்றுவிடவே விசயநகர ஆட்சிக்காலத்தில் மீண்டும் புலவர்கள் நியமனம் செய்யப்பட்டதைக் 'கொங்குப் புலவர் பட்டயம்' என்னும் ஆவணம் கூறுகிறது.

கத்தாங்கண்ணிப் பகுதிக்குச் செங்குந்தரில் போக்கங்கூட்டம் நஞ்சராயப் புலவர் என்பவர் புலவராக நியமிக்கப்பட்டார். காங்கயநாடு, பூந்துறைநாடு, குறுப்பு நாடு உள்ளிட்ட பகுதிகட்கு உவச்சன், பாலிடையன், தொழுவன், வேதியன், சேரகுல வேளாளர், மங்கலன், வணிகன், சோழியன், திருவம்படிகாரர், பச்சை மலையாளன் ஆகிய மரபினர் புலவர்களாக இருந்தனர் என்பதை அந்த ஆவணம் கூறுகிறது.

புலவர்கள் கொங்கு வேளாளர் இல்லங்களுக்கு வந்து வேளாளர் புகழ், நாட்டுப் பாடல், காணிப்பாடல், வாசல் வளம் இவற்றைப் பண்ணுடன் பாடி மகிழ்விப்பர். புலவர்கட்கு வேளாண் பெருமக்கள் விருந்திட்டுப் பரிசளித்து வழியனுப்பி வைப்பர்.

பரம்பரைப் புலவர்களைப் 'பால் சாப்பிடும் புலவர்' என்று அழைப்பர். பால் சாப்பிடுதல் புலவர்களின் உரிமையாகும். விருந்தளித்தபின் வேளாளகுலப் பெருமக்கள் தாங்கள் உண்ணும்

வெண்கல வட்டிலில் நிறையப் பாலை ஊற்றிப் பழம்போட்டுச் சாப்பிடுமாறு செய்வர். திருமண வீடுகளில் இச்சடங்கு இறுதியில் முன்பு கண்டிப்பாக நடைபெறும் ஒரு சடங்காகும். புலவர்கள் பால் சாப்பிடாத வீடுகளை இழிந்த வீடாகக் கருதுவர்.

அவ்வாறு வீடுகளுக்கும், திருமண நிகழ்ச்சிக்கும் வரும் புலவர்களுக்கு மூன்று வேட்டிகள் பரிசாக அளிப்பர். புலவர்கள் ஒரு வேட்டியை உருமாலையாகத் தலையில் அணிந்து கொள்வார். ஒரு வேட்டியைத் தோளில் போட்டுக் கொள்வார். ஒரு வேட்டியை இடுப்பில் அணிந்து கொள்வார். அறுவடை நாட்களில் புலவர்கள் வேளாளர்கள் தானியம் அடிக்கும் களத்திற்கே சென்று கொங்கு முறத்தால் வேளாளர் கொடுக்கும் தானியத்தைப் பெற்றுக் கொள்வர். அவை 'நாழிக்கம்பு' எனப்படும். வேளாளர் வீடுகளில் எப்பொழுதும் புலவர்கள் இருப்பர் என்று கொடுமுணல் இலக்கியங்கள் கூறுகிறது.

*'முத்து மணிஇலங்கும் முகசாலை மண்டபத்தில்*
*வித்வசனர் எந்நாளும் வீற்றிருக்கும் வாசல்'*

என வேளாளர் இல்லங்கள் புகழப்படுகின்றன.

குலோத்துங்க சோழனோடு கருத்து மாறுபட்ட கவிச்சக்கரவர்த்தி கம்பர் கொங்கு நாட்டுக்கு வந்தார். 'குரங்கை ஏற்றுக் கொள்ளாத கொம்பு உண்டோ?' என்று கூறிப் புறப்பட்ட கம்பரைக் கொங்குச் சமூகமே எதிர்கொண்டு அழைத்தது. கம்பரை உயர்ந்த ஆசனத்தில் இருக்கச் செய்து கவரி வீசினர். கம்பர் புறப்பட்டுச் சென்ற பல்லக்கைச் சுமந்தனர். கம்பர்தம் பாதச்சம்மாளியைச் (செருப்பு) சுமந்தனர். சந்திரசூரியர் உள்ளவரை தாங்களும், தங்கள் வமிசத்தவர்களும் கம்பருக்கு அடிமைகள் என்று அடிமைச் சாசனம் எழுதித் தந்தனர். இவ்வாறே அவ்வையார், சுந்தரர் ஆகியோருக்கும் அடிமைமுறி எழுதித் தந்தனர்.

கம்பரின் கையேட்டுக்காரரையும், அவர்கள் வழி வந்தவர்களையும் கம்பராகவே கருதினர். ஆயிரம் புலவர்கட்கு அன்னமிட்டதை ஒரு கொங்கு வள்ளல் ஆயிரம் தமிழ்க் கம்பநாடர்கட்கு அன்னமிட்டதாகக் கூறுகிறார்.

*'ஆதார மாகித் தமிழ்க்கம்ப நாடர்கள் ஆயிரம்பேர்*
*தாதாவும் என்னத் தனைநினைந் தேந்தத் தமிழ்க்கிரங்கி*
*மாதாவும் என்ன அன்னமிட்டான்'*

என்பது அப் பாடல் பகுதியாகும்.

விசயமங்கலம், கோயில்பாளையம், தென்கரைநாடு போன்ற இடங்களில் தமிழ்ச் சங்கங்களை அமைத்தனர். புலவர்கள் சோதனையாகச் செய்த துன்பங்களையெல்லாம் வேளாண் பெருமக்கள் பொறுத்துக் கொண்டனர். புலவர்களைக் குடியேற்றிப் பல இடங்களில் புலவன்பாளையம் என்ற ஊர்களை அமைத்தனர். புலவர்கட்கு நன்செய் நிலங்களை அளித்தனர்.

கொங்கு வேளாண் மக்கள் திருமண வீடுகளில் மங்கல வாழ்த்துக்குப் பின் கம்பர் வாழி, ஏரெழுபது, திருக்கை வழக்கம் ஆகியவைகள் படிக்கப்பட்டன. கொங்கு வேளாண் பெருமக்கள் திருமண இல்லங்கள் அந்நாளில் இலக்கிய மேடையாகத் திகழ்ந்தது.

இவ்வாறு ஆதரித்த கொங்கு வேளாண் பெருமக்களைப் புலவர்களும் நன்கு மதித்தனர். கொங்கு வேளாளரிடம் நீட்டிப் பரிசுபெற்ற வலக்கையைப் பிறரிடம் நீட்டாமல் மற்றவர்கள் அரசரேயாயினும் இடக்கையையே நீட்டிப் பரிசில் பெற்றனர்.

குறுப்பு நாட்டுக்குப் புலவர்கள் நியமித்த பட்டயத்தில் இரண்டாவது நாட்டுக் காணியாளர்களாகக் கையெழுத்திட்டவர்கள் வெண்டுவ குலத்தினர்.

குறுப்புநாட்டார் சுள்ளிப்பாளையம் சேனாபதிப் புலவரை நீக்கம் செய்து கொடுமணல் பழனிப்புலவர் மகன் சென்னிமலைப் புலவரை நாட்டுப் புலவராக நியமித்த கொடுமணல் பட்டயத்தில் கத்தாங்கண்ணி ரட்டிபாளையம் முத்துக் கவுண்டர், வெள்ளைக் கவுண்டர், சிலம்ப கவுண்டர், சின்னையகவுண்டர், குட்டியண கவுண்டர், கயிலாசக்கவுண்டர் ஆகியோரும், பாப்பம்பாளையம் சின்னணகவுண்டர், முத்தய கவுண்டர், அழப்பிச்சாக் கவுண்டர், வெங்கலப்பாளையம் வேலாயுத கவுண்டர், செல்லப்ப கவுண்டர், வய்யண கவுண்டர், பழனிக்கவுண்டர், தொட்டியபாளையம் பொன்னையகவுண்டர், அணப்பாளையம் முத்துக்கவுண்டர், நல்லாக்கவுண்டர், சுப்பனூர் தேவணகவுண்டர், மொசுக்கவுண்டர் ஆகியோர் கையெழுத்திட்டுள்ளனர். இவர்கள் அனைவரும் வெண்டுவன் குலத்தாரேயாவர். இவ்வூர்கள் அனைத்தும் கத்தாங்கண்ணியின் சேய்க்கிராமங்கள் ஆகும்.

புலவர்கள் நியமனத்திலும், அவர்களைப் புரந்து பாதுகாப்பதிலும் கத்தாங்கண்ணி வெண்டுவகுலப் பெருமக்கள் ஆர்வத்துடன் முன்னின்றுள்ளதை வரலாற்று ஆவணங்கள் சுட்டிக்கூறுகின்றன. தொடர்ந்து புலவர்களைக் கத்தாங்கண்ணி வெண்டுவகுலப் பெருமக்கள் மேற்கண்டவாறு ஆதரித்தனர்.

# அருள்மிகு ஆயிஅம்மன் குடிபாட்டு மக்கள் வாழும் ஊர்கள்

**ஈரோடு மாவட்டம்:**

**பெருந்துறை வட்டம்:**

1. கத்தாங்கண்ணி பாப்பம்பாளையம்
2. ஊத்துக்குளி R.S.
3. எம்மாம்பூண்டி
4. ஐயன்குளம்
5. கொளத்துப்பாளையம்
6. குன்னத்தூர்
7. குமராபாளையம்
8. சுப்பனூர்
9. சொக்கனூர்
10. பட்டம்பாளையம்
11. பெரிய பாளையம்
12. பெருந்துறை
13. மலையப்பாளையம்
14. மொட்டணம் பெரிச்சிபாளையம்
15. நல்லகவுண்டன்பாளையம்
16. நல்லாம்பட்டி
17. வரப்பாளையம்
18. விஜயமங்கலம்
19. வெங்கலப்பாளையம்
20. லட்சுமணகவுண்டனூர்

**ஈரோடு வட்டம்:**

1. இடையங்காட்டு வலசு
2. ஐய்யம்பாளையம்
3. ஒண்டிக்காரன்பாளையம்
4. கரட்டுப்பாளையம்
5. கந்தசாமியூர்
6. கங்காபுரம்
7. குமிளம்பரப்பு
8. கூரைபாளையம்
9. குட்டைத்தயிர்ப்பாளையம்
10. குமலன் வலசு
11, கைகாட்டிவலசு
12. சம்பத்நகர்
13. சின்ன வலசு
14. சித்தோடு
15. செம்பாபாளையம்
16. செம்பூத்தாம்பாளையம்
17. சொட்டையன்பாளையம்
18. சுண்ணாம்பு ஓடை
19. சேவாக்கவுண்டனூர்
20. நசியனூர் புதூர்
21. பழைய பாளையம்
22. பந்தக்கல்மேடு
23. பாலக்காட்டூர்
24. பூலப்பாளையம்
25. புதூர்பாளையம்
26. பெரிய வலசு
27. மொக்கையன்பாளையம்
28. மோலக்கவுண்டன் தண்ணீர் பந்தல் பாளையம்
29. வசபபட்டி
30. வீரப்பன் சத்திரம்
31. வில்லரசம் பட்டி
32. வேட்டுவ பாளையம்
33. R.N. புதூர்

**பவானி வட்டம்:**

1. அய்யம்பாளையம்
2. அத்தாணி
3. அந்தியூர் காலனி
4. அந்தியூர்
5. கள்ளிப்பட்டி
6. கணக்கம்பாளையம்
7. கல்லங்காட்டுப்புதூர்
8. கருக்கம்பாளையம்
9. காலிங்கராயன்பாளையம்
10. கொண்டையம்பாளையம்
11. கொள்ளபாளையம்

11அ. குண்டு செட்டிபாளையம்
12. சங்கரகவுண்டன் பாளையம்
13. சின்னியம்பாளையம்
14. சிந்தக்கவுண்டன் பாளையம்
15. சின்னப்புலியூர்
16. சித்தினட்டிபாளையம்
17. செலம்பகவுண்டன் பாளையம்
18. சென்னிமலைக்கவுண்டன் வலசு
19. A.செம்புளிச்சாம்பாளையம்
20. தவிட்டுப்பாளையம்
21. தங்கம்பாளையம்
22. திப்பிசெட்டிபாளையம்
23. தொட்டியபாளையம்
24. நஞ்சமடைக்குட்டை
25. பவானி காந்திநகர்த் தோட்டம்
26. பாலமடைக்குட்டை
27. பாராப்புளிமேடு
28. புதுப்பாளையம்
29. பூனாச்சிபுதூர்
30. பெருமாபாளையம்
31. மைக்கேல்பாளையம்
32. மும்முரெட்டிபாளையம்
33. ஜம்பை

**சத்தி வட்டம்:**

1. குள்ளநாயக்கனூர்
2. கெம்பநாய்க்கன்பாளையம்
3. கோம்புப்பள்ளம்
4. கோட்டுவீராம்பாளையம்
5. சத்தியமங்கலம்
6. வடக்குப்பேட்டை

**கோபி வட்டம்:**

1. அழகம்பாளையம்
2. ஒரம்புக்காடு
3. ஓடத்துறை
4. கங்கம்பாளையம்
5. கடைசெல்லிபாளையம்
6. குள்ளம் பாளையம்
7. குட்டைக்காடு
8. கொன்னமடை
9. கள்ள பாளையம்
10. சாவக்கட்டுப்பாளையம்
11. தாளக்கொம்பூர்
12. தொட்டிபாளையம்
13. நம்பியூர்
14. நல்லகட்டிபாளையம்
14அ. பச்சமலை
15. பழைய அய்யம்பாளையம்
16. பழைய வள்ளியம்பாளையம்
17. புதுப்பாளையம்
18. புது அய்யம்பாளையம்
19. புது வள்ளியம்பாளையம்
20. பூதிமடை
21. பூதிமடைப்புதூர்
22. பொம்பட்டி
23. மேற்குப்புதூர்
24. வேலாயுத ஆசாரிதோட்டம்.
25. மாமரத்துப்பாளையம்

**காங்கயம் வட்டம்:**

1. கத்தாங்கண்ணி
2. கன்னிமார்புதூர்
3. கரைப்புதூர்
4. பாலசமுத்திரம்புதூர்
5. ரட்டியபாளையம்

**தாராபுரம் வட்டம்:**

1. அம்மாபாளையம்
2. அய்யப்பநாயக்கன்பாளையம்
3. அனுப்பபட்டி
4. ஓலப்பாளையம்
5. கலுவேரிபாளையம்.
6. குண்டடம்
7. குங்குமம்பாளையம்
8. குடிமங்கலம் செட்டிபாளையம்
9. குப்பநாயக்கன்பட்டி
10. கொமரபாளையம்
11. கொளத்துப்பாளையம்
12. சந்திராபுரம்
13. சிங்காருபாளையம்

14. சுப்பேகவுண்டன்புதூர்
15. தும்பலப்பட்டி
16. நந்தவனப்பாளையம்
17. நாதகவுண்டன்பாளையம்
18. பேட்டைக்காளிபாளையம்
19. பொன்னாபுரம்
20. மானூர்பாளையம்
21. மாரப்பகவுண்டன்பாளையம்
22. மோலவலசு
23. வெல்லம்பட்டி
24. வெறுவேடம்பாளையம்
25. மேட்டுப்பாளையம்
26. வீரப்பனூர்
27. வெள்ளமடை
28. ஜோதிநகர்
29. ஜோதிபுரம்

**கோவை மாவட்டம்:**

**அவினாசி வட்டம்:**

1. அவினாசி
2. அவினாசி புதூர்
3. அன்னூர்
4. கஞ்சப்பள்ளி
5. கணுவுக்கரை
6. கரியாம்பாளையம்
7. கண்டிசாலை
8. காராப்பட்டி
9. காரேகவுண்டன்பாளையம்
10. காளியாபுரம்
11. கிருஷ்ணகவுண்டன்புதூர்
12. குரும்பபாளையம்
13. குப்பேபாளையம்
14. குள்ளியப்பம்பாளையம்
15. கெம்மநாய்க்கன்பாளையம்
16. கொமரபாளையம்
16அ. கொமரபாளையம்
17. கோமாளிகோவில்
18. செங்காளிபாளையம்
19. செம்பாக்கவுண்டன்புதூர்
20. செல்லனூர்
21. செம்பூத்தாம்பாளையம்
22. சொக்கமபாளையம்
23. சோமனூர்
24. தண்டுக்காரன்பாளையம்
25. தொட்டியபாளையம்
25அ. நாகம்மா புதூர்
26. பாப்பநாயக்கன்பாளையம்
27. புளியம்பட்டி
28. பேரநாய்க்கன்புதூர்
29. போடித்திபாளையம்
30. மங்கரசு வலையபாளையம்
31. மாசாண்டிபாளையம்
32. வடக்கனூர்
33. வரத்தையன்பாளையம்
34. வைத்தியங்குட்டை
35. வீரபாண்டி
36. ருத்ரயம்பாளையம்

**பல்லடம் வட்டம்:**

1. அமர்ஜோதி தோட்டம்
2. அம்மா பாளையம்
3. அணைக்காடு
4. ஆலாங்காடு
5. அனுப்பர்பாளையம்
6. அங்கேரிபாளையம்
7. ஆவாரங்காடு
8. கரட்டாங்காடு
9. கருவம்பாளையம்
10. கல்லம்பாளையம்
11. காங்கயம்பாளையம்புதூர்
12. குமரானந்தபுரம்
13. குன்னாங்கல்பாளையம்
14. சத்தியா காவனி
15. செரங்காடு
16. சொட்டைத்தோட்டம்
17. தென்னம்பாளையம்
18. நல்லாக்கவுண்டன் பாளையம்
19. பல்லடம்
20. பள்ளபாளையம்
21. பாரப்பாளையம்
22. பாளையக்காடு
23. பொங்கவாழி

24. மணியாரம்பாளையம்
25. மன்னரை
26. முத்தனம்பாளையம்
27. முருங்கப்பாளையம்
28. வளையங்காடு
29. வெள்ளியங்காடு
30. வீரபாண்டி
31. வாலிபாளையம்
32. ராயபுரம்
33. ராக்கியாபாளையம்
34. லட்சுமிநகர்
35. ஷெரீப் காலனி

**கோவை மாநகரம்**

வரதராஜபுரம்

**உடுமலை வட்டம்:**

1. அப்பிலியபட்டி
2. ஆண்டியூர்
3. உடுமலைப்பேட்டை
4. உடுக்கம்பாளையம்
5. எரிசினம்பட்டி
6. கல்லப்பாளையம்
7. சடையபாளையம்
8. தேவனூர்புதூர்
9. மைவாடி
10. K. வல்லக்குண்டாபுரம்

**பொள்ளாச்சி வட்டம்:**

1. அய்யம்பாளையம்
2. அம்பராம்பாளையம்
3. ஆச்சிபட்டி
4. உதப்பிபாளையம்
5. கருப்பம்பாளையம்
6. D. காளிபாளையம்
7. குருநல்லிபாளையம்
8. கெங்கம்பாளையம்
9. கொமரபாளையம்
10. கோலார்பட்டி சுங்கம்
11. குஞ்சிபாளையம்
11அ. கோட்டூர் மலையாண்டிபட்டணம்
12. சமத்தூர்
13. சங்கம்பாளையம்
14. சாத்துப்பாறை சித்தூர்
15. சிங்கநல்லூர்
16. சூளை சுவரண்பட்டி
17. சேத்துமடை
18. தப்பட்டை கிழவன்புதூர்
19. தேவம்பாடி வலசு
20. நஞ்சேகவுண்டன்புதூர்
21. நரசிங்காபுரம்
22. நல்லூர்
23. நல்லூத்துக்குளி
24. தா. நல்லிக்கவுண்டன் பாளையம்
25. நாதேகவுண்டன்பாளையம்
26. புரவிபாளையம்
27. பெரியபோது
28. பெரியாக்கவுண்டனூர்
29. பொள்ளாச்சி
30. போடிபாளையம்
31. மண்ணூர்
32. மாந்தகயகவுண்டனூர்
33. வடக்கிபாளையம்
34. வடுகபாளையம்
35. வளந்தாயமரம்
36. ஜமீன் ஊத்துக்குளி
37. ஜோதி நகர்

**கோவை வட்டம்:**

1. ஆவாரம்பாளையம்
2. ஆணைகட்டி
3. இடிகரை
4. ஒண்டிப்புதூர்
5. காந்தி காலனி
6. காரமடை
7. கீரநத்தம்புதுப்பாளையம்
8. குமிட்டிப்பதி
9. கொண்டனூர்
10. சங்கர் நகர்
11. சின்னமத்தம்பாளையம்
12. சூரியநகர்
13. செங்காளிபாளையம்

14. சென்னமநாய்க்கன் பாளையம்
15. ஞானிபாளையம்
16. தங்கம்மாள் நகர்
17. நவக்கரை
18. நரசிம்ம நாய்க்கன்பாளையம்
19. பச்சாம்பாளையம்
20. பீளமேடுநகர்
21. பெரியநாய்க்கன்பாளையம்
22. மணியாரம்பாளையம்
23. மார்செட்டிபதி

**நீலகிரி மாவட்டம்:**

1. குன்னூர்
2. அருவங்காடு

**சேலம் மாவட்டம்:**

1. கும்பாரபட்டிகாடு
2. குளத்தூர்
3. கோட்டைமேடு
4. கோனேரிப்பட்டி
5. சிலுவம்பாளையம்
6. தார்காடு
7. நெடுங்குளம்
8. பெரியதண்டா
9. மேட்டூர்

**சென்னை:**

1. சாலிகிராமம்

**தென் ஆர்க்காடு மாவட்டம்:**

நெய்வேலி

**கேரள மாநிலம்**

1. பத்ரகாளி அம்மன் கோவில் காடு

(சித்தூர் தாலூக்கா)

2. தொட்டிச்சிபதி.
3. R.V. புதூர்.

**கர்நாடக மாநிலம்**

1. சாம்ராஜ்நகர்
2. சுவர்ண நகர்
3. நொக்கநல்லி

(கொள்ளேனகால் தாலூக்கா)



நாநாதேசி அடைக்கலம்
சிற்பங்கள்.

## பிற்சேர்க்கை - 1

**ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், 96 சர்க்கார் கத்தாங்கண்ணி கிராமத்தின் ஆர்எஸ்ஆர் நகல் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | சர்வே எண் | 178 | 180 |
| | உட்பிரிவு | 2 | – |
| 2. | பழைய க.ச.எண் | 39 | 27 |
| 3. | சர்க்கார்/ரயத்துவாரி | ச | ர |
| 4. | நஞ்சை/புஞ்சை/புறம்போக்கு | 4 | 4 |
| 5. | இருபோக நஞ்சையின் வகுப்பு | – | 1 |
| 6. | மண்ணின் ரகம் | – | 8.1 |
| 7. | மண்ணின் தரம் | – | 3 |
| 8. | தீர்வை வீதம் (ஹெக்டர்) | – | 3.38 |
| 9. | பரப்பளவு | 0.30.5 | 4.11.0 |
| 10. | தீர்வை | – | 13.89 |
| 11. | பட்டா எண், பெயர் | – | 335 பாப்பம்பாளையம் ஆயிஅம்மன் கோயில், உதவி ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, கோவை |
| 12. | குறிப்பு | கோயில் | கிணறு |

– உண்மை நகல் –

## பிற்சேர்க்கை - 2

**கத்தாங்கண்ணி ஆயிஅம்மன் கோயில்**

| | | |
|---|---|---|
| மாவட்டம் | : | ஈரோடு |
| வட்டம் | : | பெருந்துறை |
| கிராமம் | : | 96 சர்க்கார் கத்தாங்கண்ணி |
| பரப்பளவு | : | 0.52.0 ஹெக்டர் |
| | | எண் 178 |



